பரி.பவுலின் ஆலயம், மெய்ஞ்ஞானபுரம்

# நூற்றாண்டு விழா மலர்

**29-1-1985**





கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள்

# இறை வாழ்த்து

இராகம் : கல்யாணி. தாளம்: ஆதி.

பல்லவி

விண்ண தனிலுறை யிறையவனே—நின்
கண்ணதனை வை எம்மீதிப்போ —விண்

அனுபல்லவி

தந்தை தனயன் தூயாவி நீ யன்றோ
எந்தை யுந் திருவருள், மைந்தராம் எங்கட்குத் தா —விண்

சரணம் 1

எங்கும் நின்புகழ் படைக்கின்றோம்—யாம்
இங்கும் நூறாண்டு விழா எடுக்கின்றோம்
எங்கள் மீதிவ்வேளை தூயாவியூதும்
தங்கும் எம் நடுவில் நின், சிந்தையில் செயல்பட —விண்

சரணம் 2

ஜாண் தாமஸ் தந்த பவுலாலயம்—அதன்
மாண்பு மிகு மிவ் வுயர் கோபுரம்
ஆண்டு தோறும் பெரும், பேறு பெற்றோங்க
வேண்டுகின்றோம் கருணை ஏராளமாய்ருள்வாய்.

ஸ்ா நிதப மகரி ஸகரி ஸநி தநி ஸா

கரி மக பம தப நித் நிஸ்ரி
ஸ்ா ஸ்ாநி தத பம பபம பததிஸ்ா

கரி ஸ்நித ரிஸா நிதப மப தநி —விண்

Rev. Dr. B. Darmarajan.

## வாழ்த்துப்பா



வானகம் விடுத்துமே வையகம் வந்தநல்
வானவர் இயேசுவின் அன்பினைப் பகர்ந்திட
தாயகம் துறந்து நம் இந்திய நாட்டினில்
தானடி வைத்து மெய்ஞ் ஞானபு ரத்தினில்
வானள வுயர்ந்திடு பவுலின் ஆலயம்
வான்புகழ் ஓங்கிட வகையுடன் அமைத்து
ஜாண்தாமஸ் சான்றோர் திருப்பணி வாழ்த்தி
ஆண்டாண் டிதனை அருமையாய்க் காத்து
ஆலயக் கோபுரம் கவினுறப் படைத்திட
ஆவலா யுழைத்த ஆன்றோர் போற்றி
ஊக்கமாய் ஆலயம் பழுதறப் பரிவுடன்
ஆக்கமாய்ச் செயல்புரி சீரிய ரேற்றி
நானில மீதினில் புதுமெரு கேற்றிட
நாடொறு முயன்றே நன்கொடை திரட்டினோர்
நாதனின் ஆலயம் அழகுற அன்புடன்
ஆதர வளித்துநன் னிதிதனைக் கொடுத்தோர்
தேவனின் வீடிது வாழ்ந்திட நினைத்துத்
தேவனை வேண்டியே அருள்பெற விழைந்தோர்
மாறாச் செல்வமும் மகிழ்ச்சியும் நிறையும்
மானுவே லருளால் மட்டில்லா வரங்களும்
அடுக்கடுக் காகவே அனைவரு மடைந்திட
அமுதநல் லாசிகள் பெருகியே சுகித்திட
கோபுர நூற்றாண் டெழில்நிறை விழாவிதில்
கோடியாய்க் கோமகன் இயேசுவைத் துதித்து
இனிதே கனிவுடன் பணிந்து
இறைஞ்சி நின்றனன் விருப்புடன் இன்றே.

**மெய்ஞ்ஞை மகள்**



Moderator :
**The Most Rev. I. Jesudasan**, B.D., M.Th., S.T.M.,
L. M S. Compound, Trivandrum-695 033
South India
Tel : 62662 (Trivandrum)

# CHURCH OF SOUTH INDIA

The Synod Secretariat

222, Cathedral Road, P. B. No 4906, Madras-600 086, South India.

## MESSAGE

Ref: No SND

Date: January 7, 1985

**The Rev Dr. B. Dharmarajan**,
Pastorate Chairman,
Meignanapuram Pastorate,
Meignanapuram-628 210
Tirunelveli District.

*Dear Rev. Dr. Dharmarajan*,

I am extremely happy to understand that you are going to celebrate the Centenary of Tower of St Paul's Church, Meignanapuram and publish a Souvenir to mark the occasion.

This is indeed an occasion to thank God for His manifold blessings received during the past years. We also join you in the joy and gratitude that fill your heart at the time of this celebration. Let this be an occasion to rededicate ourselves so that we may become a channel of Christ's love and bring new life to many people in and arround the Church. As the Tower of the Church stands high and is seen by all, let others see your good works and glorify God

We send our warmest greetings and best wishes on the occasion. May our Lord Jesus Christ continue to bless this church.

With prayers and blessings,

*Yours sincerely*,
*(Sd.) Most Rev. I. Jesudasan*,
Moderator/Bishop.

# THE CHURCH OF SOUTH INDIA

DIOCESE OF MADRAS

*Bishop* :
**The Rt. Rev. Sundar Clarke**
Deputy Moderator.

Date : 11–1–1985

*To*

*Rev. Dr. B. DARMARAJAN,*
*Megnanapuram.*

## MESSAGE

It gives me great pleasure to send my greetings and good wishes for the St. Paul's Church Tower Centenary celebrations. A Church tower and it's existence for 100 years is certainly a very significant milestone in the history of a church. May God bless the church, it's tower and it's people.

It is our prayer that the tower that stands atop is a clear indication and land mark of a church. Similarly a christian's life must be atop of the world standing high above in morals, in concerns for the poor, in evangelism and in spirituality. A tower is also a place that invites people and draws people's attention to the presence of Jesus Christ in a localized area. Our lives should be similar symbols of inviting people to Jesus within A tower is also sending out a message of the existence of the reality of Jesus Christ and so must our christian life be

(Sd.) Sundar Clarke,

SC/mp

*Bishop in Madras*



நெல்லை திருமண்டல பேராயர்

கனம் ஜேசன் சி. தர்மராஜ்

# CHURCH OF SOUTH INDIA

## TIRUNELVELI DIOCESE

**Rt. Rev. Jason S. Dharmaraj, M A, B D., Dip. Th.**
*Bishop in Tirunelveli.*

P. B. 18
BISHOPS HOUSE
PALAYAMKOTTAI-627 002

மெஞ்ஞானபுரத்தில் கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களால் கட்டப்பட்டுள்ள பரி. பவுலின் ஆலயம், ஊழியரின் திட நம்பிக்கையையும், விசுவாசத்தையும் நமக்குக் காட்டுகிறது. 137 ஆண்டுகளுக்கு முன்பு இக் கிராமத்தில் இந்த அழகிய ஆலயத்தைக் கட்டவும், நூறு ஆண்டுகளுக்கு முன் மகிமையான இக் கோபுரத்தை எழுப்பவும் துணிந்த கடவுளின் திருப்பணிவிடையாளர்களின் நம்பிக்கை எவ்வளவு பெரிது! அந்த நம்பிக்கையின் அடிப்படை, இயேசுவின் பால் அவர்கள் கொண்ட ஆழ்ந்த அன்பு. கிறிஸ்துவின் அன்பு எங்களை நெருக்கி ஏவுகிறது என்ற திருவசனத்தின் அடிப்படையில் பணி செய்த ஊழியர்கள், இம்மகத்தான காரியத்தை நிறைவேற்றினர். இவ்வாலயத்தின் கோபுரம் நம்பிக்கையின் ஒரு சாட்சி; கடவுளின் திருநாமத்துக்கு மகிமை.

22–1–1885ம் ஆண்டு பிரதிஷ்டை செய்யப்பட்ட இக் கோபுரம், அதன் பின் புதுப்பிக்கப்படாமலேயே இருந்தது. 100 ஆண்டுகளுக்குப் பின் கோபுரம் முழுவதும் புதுப்பிக்கப்படக் கடவுள் செயலாற்றினுர். இப்பெரிய பணியை நிறைவேற்றின சேகர குருவானவர், மற்றும் ஊழியர், சபை மக்கள் அனைவரையும் இயேசுவின் வல்ல நாமத்தில் வாழ்த்துகிறேன். தொடர்ந்து கடவுளின் திருப்பணி செவ்வெனே இவ்வாலயத்தில் நடைபெறவும், கிறிஸ்துவின் நற்செய்தி பாரெல்லாம் பரவவும் இக் கோபுரமும், ஆலயமும் கல்வாரி நாதரின் அன்புக்கு சாட்சியாக விளங்குவதாக. அவருக்கே எல்லா கனமும், மகிமையும் உண்டாவதாக!

இயேசுவின் திருப்பணியில்,

ஜேசன் சி. தர்மராஜ்,

பேராயர்.

# THE CHURCH OF SOUTH INDIA

DIOCESE OF TIRUNELVELI

**The Rev. V. D. Selvanayagam,**
Vice Chairman,
Diocesan Council.

Date : 14–1–1985

*The Rev. B. Darmarajan,* D, D.,
Pastorate Chairman,
*Megnanapuram.*

## MESSAGE

Greetings in His sweet name.

I am very happy to hear the centenary celebrations at Megnanapuram I pray all the celebrations be successful and be for the glory of the God Almighty.

I wish that the people who worship in St Paul's Church, Megnanapuram under the centenary old tower, grow high as their tower in strength and power of the holy spirit and glorifying their Lord in their every day life.

Yours in His sincerly,

(Sd.) V. D. Selvanayagam,
*Vice Chairman.*

*The Rt. Rev. S. Daniel Abraham*
B.D, S.T.M.
(Bishop in Tirunelveli-Retired)
TIRUMARAIYUR, NAZARETH (TVL) 628617

The Rev. B. Dharmarajan
Pastorate Chairman
Megnanapuarm

January 23, 1985.

Rev. and Dear Brother,

மெஞ்ஞானபுரம் சபை மக்கள் யாவரையும் ஆண்டவர் இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துகிறேன். கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களால் மெஞ்ஞானபுரம் சபைக்கு ஈவாகத் தரப்பட்ட ஆலயத்தையும் அதற்கு மகுடமாக அமைக்கப்பட்டுள்ள கோபுரத்தையும் அதன் புதுமையும் புகழும் மங்காது பேணிக்காத்து வரும் தலைமுறை தலைமுறையான சபை மக்களை



யும் அவர்களைக் காலாகாலங்களில் ஊக்குவித்து வரும் ஊழியர்களையும் மிகவும் பாராட்டுகிறேன். நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் பொழுது இரண்டு லட்சத்திற்கதிகமான செலவில் ஆலயத்தையும் கோபுரத்தையும் புதுப்பித்துள்ளது குறித்து அதிக மகிழ்ச்சியடைகிறேன்.

வானளாவி நிற்கும் பரி. பவுலின் ஆலயத்தின் கோபுரம் கிறிஸ்தவ வாழ்க்கையின் தனித்தன்மையை நமக்கு எடுத்துக்கூறிக் கொண்டேயிருக்கிறது கற்பாறையாகிய கிறிஸ்துவின் மேல் அஸ்திபாரமிட்டவர்களாய் வானாதி வானங்களில் வீற்றிருக்கும் சர்வவல்ல கடவுளுடன் தொடர்புடையவர்களாய் மேலான காரியங்களில் நாட்டத்தோடு, இயேசுகிறிஸ்துவின் அன்புக்கு சாட்சிகளாய் நமது கிறிஸ்தவ வாழ்க்கையை நடத்த அமைதியாய் நம்மை அழைத்துக் கொண்டேயிருக்கிறது.

இந்தக் கோபுரத்தின் நிழலில் பிறந்து, வளர்ந்து, கல்வி கற்று உலக முழுவதும் ஆண்டவர் இயேசுகிறிஸ்துவுக்கு சாட்சிகளாய் வாழ்ந்த, வாழ்ந்துவரும் மக்களுக்காகக் கர்த்தரை ஸ்தோத்தரிப்போமாக தொடர்ந்து இத்தகையதான உயிருட்டத்தைப் பெற்றவர்களாய் இயேசு கிறிஸ்துவின் நாமத்திற்கு சாட்சியாக செயல்பட கர்த்தர் நம்மை ஆசீர்வதிப்பாராக.

" கர்த்தருடைய ஆலயத்திலிருந்து உங்களை ஆசீர்வதிக்கிறோம். கர்த்தர் நம்மைப் பிரகாசிப்பிக்கிற தேவனாயிருக்கிறார் ........ கர்த்தரைத் துதியுங்கள், அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது "

With Prayers and all good wishes

Yours sincerly,

*S. Daniel Abraham,* Bp.



அருள்திரு. அறிவர். B, தர்மராஜன் D. D.

# மெய்ஞ்ஞானபுரம் தூய பவுலின் ஆலயக் கோபுரப் பிரதிஷ்டை

# நூற்றாண்டு விழா மலர்

**22—1—1985**

## நன்றியுரை

நமது ஆண்டவரும், இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் மட்டற்றக் கிருபையினாலே, இவ்வாலயக்கோபுரப் பிரதிஷ்டை விழாவினையும், 137 ஆண்டுகளுக்குப்பின் ஏறக்குறைய முழுவதும் புதுப்பிக்கப்பட்ட இம்மகத்தான ஆலயத்தின் மறுபிரதிஷ்டை வழிபாட்டினையும், புதுப்பிக்கப்பட்ட கோட்டைகளின் பிரதிஷ்டையினையும் நாம் நம் தலைமுறையில் இன்று கண்டு களிக்கும் பாக்கியமும் நன்மையும் பெற்றுள்ளோம். துதிகனம் மகிமை கர்த்தருக்கே உரியன!

இம்மகத்தான பழுதுபார்க்கும் பணிக்கெனச் செபித்த முழங்கால்களை வாரி வழங்கிய கரங்களை, உழைத்த கரங்களை ஆண்டவர் இயேசு திடப்படுத்திப் பலப்படுத்தி, அவர்களுக்கும், இத்தெய்வச் சபை முழுவதற்குமே நிறைந்த ஆசீர்வாதத்தைக் கட்டளையிடுவாராக!

இக்கோபுரப் பணி, ஆலயம் சுற்றுப்புறம், உட்புறம்யாவையும் செப்பனிட்ட தச்சர், கொத்தர்களைப் பாராட்டுகிறோம். மேலும் இப்பணியினைப் மேல்பார்த்து, உடலுழைப்பையும் நேரத்தையும் தியாகித்து முன்னின்று நடத்தின அனைவரையும், அவ்வப்போது ஆலோசனை தந்த பாஸ்ட்ரேட் கமிட்டியினரையும், ரிப்பேர் கமிட்டியினரையும், மகமைக் கமிட்டியினரையும் அவர்களது ஒத்துழைப்பினையும் நன்றியோடு வாழ்த்துகிறோம்.

அஃதுடன் இவ்விழாச் சிறப்பு மலருக்காகக் கட்டுரைகள் வாழ்த்துக்கள், கவி கவிதைகள், சித்திரங்கள், விளம்பரங்கள் தந்துதவிய அன்பர்களுக்கெல்லாம் எம் நன்றி! குறிப்பாக மலருக்கு ஆபரணங்களாக Moderator, Deputy Moderator நமது நெல்லைப் பேராயர், ஓய்வு பெற்ற பேராயர், பேராயத்தின் உபதலைவர் ஆகிய பெரியோர் அனுப்பித் தந்த அணிந்துரைகளுக்காக எனது உளங்கனிந்த நன்றி

சிறப்பாக இம்மலர் மணம் எங்கும் பரவும் வகையில், தோளோடு தோள் நின்று தழுவிய அருமைச் சகோதரர்களுக்கும் என்னன்பு கலந்த நன்றியினை நவில்கின்றேன்

நூற்றாண்டு விழாவின் போது தேவச் செய்திகளை வழங்கிய பேராயர்கள், குருக்கள், பஜனை நடத்தின குருக்கள், சகோதரர்களுக்கெல்லாம் வாழ்த்துக்கள்.

வரும் கல்வி ஆண்டு முதல் மெய்ஞ்ஞானபுரத்தில் கனம் ஜாண்தாமஸ் ஐயரவர்களின் பெயரில் ஆரம்பிக்கப்படவிருக்கும் பெண்கள் ஆசிரியைப்பயிற்சிக்கல்லூரிக்கு நன்கொடை வழங்கியவர்களுக்கும் வழங்குவதாக வாக்களித்துள்ள பெரியோர்களுக்கும், நிலம் நன்கொடையாக வழங்கியுள்ள அன்பர்களுக்கும் எங்கள்மனம் கனிந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம். மற்றும் ஆலய பிரதிஷ்டை பண்டிகை மற்றும் அசனகாரியங்கள் சிறப்பாக நடைபெற உழைத்துக் கொண்டிருக்கிற பொருட்களை வாரி வழங்கிக் கொண்டிருக்கிற, ஜெபித்துக்கொண்டிருக்கிற யாவருக்கும் எங்கள் உள்ளம் கனிந்த வணக்கத்தையும் நன்றியினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இறுதியாக, இம்மலர் தகுந்த வேளையில் வெளிவர துரிதமாகச்செயலாற்றிய நாசரேத் ரத்னா அச்சகத்தினருக்கும் எங்கள் நன்றி!

நான் உங்களுடனே இருக்கிறேன் ......... பயப்படாதேயுங்கள்.........முந்தின ஆலயத்தின் மகிமையைப் பார்க்கிலும், இந்தப் பிந்தின ஆலயத்தின் மகிமை பெரிதாயிருக்கும்...இவ்விடத்திலே சமாதானத்தைக் கட்டளையிடுவேன். (ஆகா. 2:4, 6, 9) என்றும், இஸ்ரவேல் புத்திரர் நடுவிலே வாசம் பண்ணி, என் ஜனமாகிய இஸ்ரவேலைக் கைவிடாதிருப்பேன்'' (I ரா. 6:13) என்றும் சேனைகளின் கர்த்தர் உரைக்கிறார்

இப்புனித மண்ணிலே, புதுப்பிக்கப்பட்ட இத் தேவனுடைய வீட்டிலே, அவரது மகிமையின் பிரசன்னத்திலே, அவரது வாகுத்தத்தங்களை நமக்கு சொந்தமாக்கிக் கொண்டு நம்மையும் புதுப்பித்துக் கொண்டு அவரது பாதமலரில் நம்மைப் படைப்போமாக! இப்பொழுது விசுவாசத்தோடு, நம் சபையின் வரலாற்றுச் சோலைக்குள் சென்று, இறைவனது இணையற்ற கருணை, நமது முன்னோர் ஆற்றிய விசுவாசச் செயல்கள் ஆகிய மலர்களை நுகர்ந்து, சிந்தை தெளிந்து திரும்புவோமா?

இவண்,

அருள்திரு அறிவர் B. தர்மராஜன் D.D.

## மெய்ஞ்ஞானபுரம் சேகர கமிட்டி அங்கத்தினர்கள்

| | |
|---|---|
| சேர்மன்: | அருள்திரு. அறிவர் B. தர்மராஜ்ன், D.D. அவர்கள். |
| செயலர்: | திரு. S. D. பஞ்சபதி மனோகரன், அவர்கள். |
| பொருளாளர்: | திரு. D. தாமஸ் பிச்சைமணி, அவர்கள். |

டீக்கன் G. ஜெயக்குமார், B.Sc.B.D. அவர்கள்
அருள்திரு. P. சாமுவேல்ஜெயராஜ் ,,
,, S. சாலமோன், சைமன் ,,
திரு. தியாகராஜ் குருபாதம் ,,
,, D. ராபர்ட் பாண்டியன் ,,
,, R.S. பொன்னுசாமி ,,
திருமதி. C. லீலாரூபி ,,
திரு. J.S தங்கையா ,,
,, Y ஜோசப்மாணிக்கம் ,,
,, S. ஜோதிலிங்கம் M.A B.Ed, ,,
,, A. ஜெய்சிங் B.Sc. ,,
(டயோசீசன் நிர்வாக கமிட்டி உறுப்பினர்)

திரு. S டேவிட்தனசிங், M.A. B.Ed; அவர்கள்
,, D. சீமோன் ஞானராஜ் ,,
(டயோசீசன் கமிட்டி உறுப்பினர்)
,, T. பொன்சேகா ,,
,, G. தேவராஜ் ஞானையா ,,
,, J கனகராஜ் செல்லப்பா ,,
,, S. தேவஇரக்கம், B A.B.T; ,,
,, D தியாகராஜ் ,,
,, P. யோவான் ,,
,, S. கோயில்பிச்சைராஜ், B.A; ,,
,, T. ராஜமணி ,,
,, J. தவமணி டேவிட் ,,
செல்வி. அலிஸ் அ சாமுவேல், M.A.BT; ,,

மெய்ஞ்ஞானபுரம் ஊர் மகமை :

| | | |
|---|---|---|
| தலைவர்: | திரு. M. யோசேப்பு நாடார். அவர்கள் | |
| செயலாளர்: | ,, D. சுந்தரம், | ,, |
| பொருளாளர்: | ,, T. பொன்சேகா | ,, |

# வரலாறு படைத்த மெய்ஞ்ஞானபுரம் !

ஆண்டவரே நெடுவிளைக்குக் கிராமத்தில் உம் தூதுவன் ரேனியஸ் ஐயர் 1825ல் கால்
வைத்து அன்று ஊர்த்தேவதைக்கொடை நடக்கும் போது, நச்சரவால் கடியுண்ட, சாமியாடியின்
மகன் நுரைதள்ளிச் சாவுக்குச் சமீபமானவேளையில், கத்தி கொண்டு கடிவாயைப் பெரிதாக்கிக்
குருதியைச் சிந்தச் செய்து, மருந்கிட்டுச் செபித்து அவனுக்கு உயிர்பிட்டித்தந்தார் ரேனியஸ்,
அப்பொழுதே இறைமகன் இயேசுவின் நற்செய்தியை அம்மக்களுக்கு அன்பாக அறிவித்தார்.
அச்சணமே அச்சாமியாடி குடும்பத்தினரும் இரா குடும்பத்தினரும் பின் 1826 ஏப்ரல் 7ம் தேதி
19 பேர் மந்தையில் சேர்ந்தனர். என்னே இயேசுநாதரின் விந்தைச் செயல்! 45வயது வேலுமூர்த்தி
பேதுரு வேதமுத்து என்றும். 50வயது சுப்பிரமணியன் மத்தேய ஞானச்சண் என்றும் 60வயது நீலன்
ஜாண் அமிர்த நாயகமென்றும். 25வயது அருந்தப்பன் பிலிப்பு அமிர்தநாயகமென்றும் புதுநாமம்
சூட்டப் பெற்றனர். நெடுவிளைவின் ஆதித்திருச்சபை அங்கத்தினர் இவர்களே!

பின்பு ரேனியஸ் ஐயர், மைக்கேல் எனும் தெய்வபக்தியுள்ள வாலிப உபதேசியாரை நியமித்து,
இச்சிறு மந்தை அவரால் 40 ஆண்டுகள் போஷிக்கப்பட்டு வந்தது. "I often entrusted him
with the expenditure of large sum of money and never found the least reason to
doubt his faithfulness— his mind was well balanced He was a man of sound
judgement gentle in disposition and manners—" இவ்வாறு கனம் ஜான் தாமஸ் ஐயர்,
திரு. மைக்கேல் உபதேசியார் பற்றிக் குறிப்பிடுகிறார். இக்கசைய உத்தமரின் ஊழியம் முதல் நாற்பது
ஆண்டுகள், நெடுவிளை, பின்னால் மெஞ்ஞானபுர பரியந்திருச்சபைக்குக் கிடைத்தது இறைமகன்
இயேசுக் கிறிஸ்துவின் சத்தக் கிருபையின் ஈவே ஆகும்.

கனம் ரேனியஸ் அனுமதியோடு, இந்து ஆலயம் இருந்த அதே இடத்தில் ஜெபவீடு எழுந்தது.
அது இயேசு பகவானின் உறைவிடமாயிற்று, அவரது சிறு மந்தை ஆத்மீக ஆகாரம் பெரும்
திருவீடாகவும் அமைந்தது.

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் வருகை

நெல்லை அப்போஸ்தலன் ரேனியஸ் ஐயர் 7—7—1820ல் திருப்பணியைப் பாளையங்
கோட்டையில் துவக்கி 1825ல் நமது நெடுவிளைச் சபையை உருவாக்கித்தந்தார் பின் 1835
ஜூன் மீ நெல்லையை விட்டுச் சென்னை சென்றார் நிற்க.

இங்கிலாந்திலே ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்த வளர்ந்த வாலிபன் பெயர்
ஜாண் தாமஸ். பாதிரிமாரைப் பகடிபண்ணுவது இவரது பொழுது போக்கு. பயர்ஸ்
ஐயர் பிரசங்கம் கேட்டுக் குணப்பட்டார் பவர்ஸ் ஐயரும், அம்மையாரும் மிகவும் புனி
தர்கள். தாம் செய்த தவறுகளை எண்ணி இவர்களிடம் சென்று ஏங்கி ஏங்கி அழுது
மன்னிப்புக் கேட்டார். கண்ணீரைத் துடைத்து, அன்பு பாராட்டி மகன் போல நடத்
தினார் பயர்ஸ் ஐயர். இந்த இறையன்பு, ஜாண் தாமஸுக்கு ஊழிய பாரத்தைக்
கொடுத்தது. பயர்ஸ் ஐயர் ஆலோசனையின் பேரில் ஊழியக் காரனானார், 1836ல்
குரு அபிஷேகம் பெற்றார். மிஷனெரியாக 1836ல் கிறிஸ்மஸ் அன்று சென்னை வந்து
இறங்கினார். 17 1 1837ல் திருநெல்வேலிக்கு மிஷனெரியாக வந்தார். குருவன்

கோட்டை, குற்றாலம் சபைகளைக் கண்காணித்தார். பின், கனம் பெட்டிட் ஐயருக்கு
உதவி செய்து கொண்டிருந்தார். இவ்வருட் பணியில் பல இடங்களுக்குச் சென்று விட்
டுக் கடைசியாக மெய்ஞ்ஞானபுரம் வந்தார், அன்று 1837 கிறிஸ்மஸ் தினம். அன்று
டன் அவர் இந்தியா வந்து ஓராண்டு முடிந்தது. இதனாலோ, என்னவோ, அன்றே
இந்த மண்ணிலே, அவரை அறியாமலே ஒரு பற்றும் பாசமும் உண்டாயிற்று. பரமன்
இயேசுவின் சித்தந்தையும் கனம் ஜாண் தாமஸ் அன்றே கண்டார்; ஆனந்தம் கொண்

கனம் ரேனியஸ் ஐயர் நெடுவிளைக்கு மெய்ஞ்ஞானபுரம் எனப் பெயரிட்டு
1825ல் ஒரு சிறுகோவிலை இரண்டாம் முறை கட்டிப் பிரதிஸ்டை செய்தார். அன்று
சபை மக்கள் 330. அவ்வளவும் ஓலைக் குடிசைகளே. 1831ல் ஒன்பது சேகரங்கள் உரு

வாயின, மெய்ஞ்ஞானபுரமும் அதில் ஒன்று திரு. மைக்கேல் இதன் தலையை உபதேசியாராகப் பணியாற்றினார்.

### புடமிடப்பட்ட மெய்ஞ்ஞானபுரம்

1832ல் காலரா வியாதியால் உயிர்ச்சேதம் அதிகம். இச்சூழ்நிலையிலும் கிறிஸ்தவ விசுவாசமும், ஆவிக்குரிய வாழ்க்கையும் சபையில் சிறந்து விளங்கின. ரேனியஸ் ஐயர் மனம் மகிழ்ந்தது. இன்று இவ்வித விசுவாச உறுதி நமக்குண்டா? இது கோவிலாக இருந்ததால், அத்தனை குடும்பமும் தொழுகையில் பங்கெடுக்க வந்ததால், இடமின்றி வெளியே நின்றே தொழுதனர். இன்று அத்தனை குடும்பங்களும் அனுதினமும் ஆலயத்துக்குத் திரண்டு வந்தால் அநேக வேதனைகள் நம்மை விட்டு நீங்கும். 1833ல் பொறாமை கொண்ட சில புறமதத்தினர் மைக்கேல் உபதேசியாரை வீடு புகுந்து தாக்கினார். குற்றுயிராய்க் கிடந்தார். ஆண்டவர் இயேசு தம் தாசனின் உயிரைக் காப்பாற்றினார். சபை பலத்தது நோயும், துன்பமும் புடமிட்டன இருப்பினும் சபை வளர்ந்து பெருகிற்று. இன்று நம்மை எதிர்த்து எவனும் உள்ளே கால் வைக்க முடியுமா? எவ்வளவாய் ஆண்டவர் நம்மை ஆசீர்வதித்திருக்கிறார்!

மார்ச்சு 23, 1837ல் கனம் பெட்டிட் ஐயரவர்களால் இங்கு முதல் நற்கருணை வழங்கப்பட்டது. 47 பேர் பங்கு கொண்டனர் மற்றப்படி பாளையங்கோட்டை சென்றால்தான் நற்கருணை பெற முடியும்! அப்பொழுது கனம் ஜாண் தாமஸ் இங்குத்தங்க இடமின்றிப் பாளைய கோட்டையிலிருந்துதான் சபையை பார்க்க வருவார். 1839ல் இப்பொழுதுள்ள பங்களா கட்டினபின்னர், கனம் ஜாண் தாமஸ் ஐயரும், மனைவி மேரியம்மாளும் இங்கு வந்து குடியேறினர்.

### புதுப்பொலிவடைந்த மெய்ஞ்ஞானபுரம்

1841ல் 4 பிள்ளைகளுடன் மேரி ஜாண் தாமஸ் பெண்கள் பாடசாலையைத் துவக்கினார். அது வளர்ந்தது, சாந்தான்குளத்திலும் இப்படி ஒரு பள்ளி ஆரம்பிக்கப்பட்டு, அது சீனித்தது. சாத்தான்குளம் குருவானவர் வேண்டுகோள்படி, அப்பள்ளிக்கூடம் நமது பள்ளியுடன் இணைக்கப்பட்டது இரண்டும் சேர்ந்து சீரிய முறையில் முன்னேறியது, 1843ல் பேரி எலியட் டக்ஸ்பேரர்டு போர்டிங் பள்ளியின் பிரதான கட்டடத்துக் கனம ஜாண் டக்கர் ஐயர் அஸ்திபாரமிட்டார். இங்கிலாந்திலுள்ள சிறு சபையான Twoford என்ற கிராமச் சபையும், அதன் குருவானவர் E.B. Elliott இப்பள்ளிக்காக அனுப்பிய நன்கொடை அதிகமாக இருந்த காரணத்தாலும், இப பள்ளி தோன்ற ஆதிமூலமாக மேரியம்மையார் செயலாற்றினமையாலும், மேரி எலிய டக்ஸ்போர்டு பாடசாலை எனப் பெரிட்டார் கனம் டக்கர் ஐயரவர்கள், இப்போது மேரியின் பேர் எடுபட்டதேனோ? இது சரித்திரம் அறியாதோர் செயலாகும்: செய்ந்நன்றி கொன்ற செயலுமாகும்! 1844ல் முடிவுற்ற இக்கட்டமே, மெய்ஞ்ஞானபுரம் சபையினருக்குத் தேவனைத் தொழும் தலமாக மூன்றரை ஆண்டுகள் பயன்பட்டது, இதன்பக்கலில் நிற்கும் இலந்தைமரம் இதற்கு இன்றும் சாட்சி! இப்பொழுது இக்கட்டிடம் பழுதுப்பார்க்கப்பட்டுச் சிற்றாலயமாகச் சிறப்பான காட்சியளித்து நிற்கின்றது, இப்பள்ளியில் பயின்ற பழைய மாணவிகளில் ஒருவரே இன்று இப்பள்ளியின் Correspondent ஆக இருப்பது ஒரு பேறும் பெருமையுமாம்!

இக்காலத்தில் விபூதிச் சங்கத்தின் மூலம் கனம் தாமஸ் ஐயருக்குப்பல இன்னல்கள் உண்டாயின. பலப்பகைகளைச் சந்தித்தார்: தளரவில்லை இதனால் வெள்ளாளன்விளை. நாலுமாவடி ஆண்டவருக்குள்ளாயின,

பெலன்கொண்ட தாமஸ் ஐயர், 1844ல் ஆண்கள் பள்ளியைத்துவக்கினார், அதுவும் வளர்ந்தது நேரு பிறந்த 1888ல்தான், இப்பள்ளியில் முதனமுதல் Matriculation பரீட்சைகளை மாணவர் எழுதினர். பிற்காலத்தில் அப்பள்ளியின் தலைமை ஆசிரியராகப் பணியாற்றிய கனம் அப்புரோஸ் ஐயரவர்கள், இம்மாணவர்களுள் ஒருவராவார்! இன்று இது அப்புரோஸ் மேல்நிலைப்பள்ளி, என மிளர்கின்றது பேராயர் அசரியா. பேராயர் சவரிமுத்து, பேராயர், சாமுவேல் தானியேல் ஆபிரகாம், இந்த ஆண்டு நான்காவதாக பேராயர் ஜேசன் சிரோன்மணி தர்மராஜ் ஆகியோரை உருவாக்கித்தந்த பெருமை பெற்று இன்று நிற்கின்றது இப்பள்

1843 மெய்ஞ்ஞானபுரத்துக்கு ஒரு நல்லாண்டு. மெட்ராபாலிட்டன் பிஷப் டானியேல் வில்சன் பாளையங்கோட்டை வந்தவர், இங்கு விஜயம் செய்தார். இதுவே மேற்றிராணியாரின் முதல் வருகையாகும் மெய்ஞ்ஞானபுரத்துக்கு! இவர்தான் மெய்ஞ்ஞானபுரம் ஆலயம் கட்ட முதன்முதல் நன்கொடை முடிச்சு ஒன்றைக் கனம் ஜாண் தாமஸ் ஐயரிடம் தந்தார்.

இக்காலத்தில் நெல்லை மாவட்டமே விஷபேதியால் துயருற்றது. மெய்ஞ்ஞானபுரத்திலும் பல உயிர்கள் போயின. ஜாண் தாமஸ் ஐயர் மாத்திரைகள் செய்து, உபதேசியார் மூலம் கொடுத்து, வியாதியைக் கட்டுப்படுத்தி அநேக உயிர்களைக் காப்பாற்றினார். வியாதிகள் நீங்கி சுகச் சூழ்நிலையில், இங்கிலாந்தின் kent மாநிலத்திலுள்ள Good mestone தேவாலயத்தின் மாதிரியாக, மெய்ஞ்ஞானபுரம் ஆலயம் 1843 ஜூன் 20ல் கனம் ஜாண் டக்கர் ஐயர் அவர்களால் அஸ்திபாரமிடப்பட்டது. இவ்வாண்டில் நமது ஊர் ஒரு பாலைவனப் பசுஞ்சோலையாக மாறிற்று என்கிறார் கனம் பெட்டிட் ஐயர்.

Bishop NEILL remarks as follows, in his book "Builders of the Indian Church, 1934:" A Welshman John Thomas sent by the CMS to Tinnevelly in 1838 and assigned as his station, Meignanapuram, the village of true wisdom ..... Thomas lived there for almost a third of a century. Before he died the desert had been made to rejoice and to blossom as the rose -- Thomas saw into the future with the eye of faith and decided that the Christians must have a great and glorious church in which to worship God .....In 1849 the great church of St. Paul was complete; Fifteen hundred worshippers are not crowed in it. Its spire, a hundred and ninety feet in height, is seen from far away rising out of the surrounding green – a silent witness for christ, and a moving testmony to the faith and vision of the pioneer, the Rev. John Thomas".

## ஜாண் தாமஸ் ஐயரின் துயரம்

1845-ல் குற்றாலம் சீசன் சமயம் ஐயரவர்கள் குடும்பத்துடன் அங்குச் சென்றிருந்தனர். காலையில் சிரித்து விளையாடிக்கொண்டிருந்த தமது இரண்டாவது மகன், இரண்டு வயது. மாலையில் திடீரென வந்த வியாதியால் மரித்துப்போனான். தாமஸ், மேரி தம்பதியரைத் துயரம் கவ்விற்று. தென்காசி செல்லும் பாதையில் 1837—38ல், தாமஸ் அங்குக் கட்டிய தேவாலயத்தினருகில், கண்மணியைக் கல்லறையில் வைத்துவிட்டு, இறைவனது சித்தமிது என எண்ணி இயேசுவின் தொண்டினைத் தொடர்ந்தார். நாமும் இம் முன்மாதிரியைக் கனம் ஐயரவர்களிடமிருந்து கற்றுக்கொள்வோமாக!

மேலும், விபூதிச் சங்கத்தினர் துன்பம் ஒருபுறம், நல்லூர் கிறிஸ்தவர்கள் பட்ட துன்பம் மறுபுறம்; இதற்கெல்லாம் மேல் 1845 டிசம்பர் 2ல் ஏற்பட்ட பயங்கர புயலால் பெரும் நாசம்— இவை எல்லாவற்றின் மத்தியிலும் மயங்காது, மனமடிவில்லாது பணிபுரிந்தார் தாமஸ். இச்சமயம் தரை மட்டமான கிராமங்களில் மெய்ஞானபுரமும் ஒன்று. அஞ்சா நெஞ்சமும், ஆழ்ந்த விசுவாசமுள்ள தாமஸ் 1846-ல் உடனே அழகான தெருக்கள், தென்னைகள், வீடுகள் அமைத்து இன்று நாம் காணும் மெஞ்ஞானபுரத்தை உருவாக்கினார். இவ்வாண்டில் ஓயா உழைப்பால் கொடிய நோயால் பீடிக்கப்பட்டுத் தாமஸ் மரணத்துக்குச் சமீபமானார். சபையார் உள்ளத்தை ஊற்றி மிஷனரியின் உயிருக்காக மன்றாடினர். ஆண்டவர் இரங்கினார். பல மாதங்களுக்குப் பின் பூரண சுகம் பெற்றார். பணியினைத் தொடர்ந்தார் ஒரு நாளில் 40 நிமிடங்கொண்ட ஒன்பது பிரசங்கம் செய்து கர்த்தருடைய ஊழியத்தில் கரைந்து மகிழ்ச்சி பெற்றார்.

1844-ல் கனம் J. டக்கர் ஐயரவர்களால் அஸ்திபாரமிடப்பட்ட மெய்ஞானபுரம் தேவாலயம் 1847-ல் ஒருவகையாக முடிந்தது. ஓட்டுக்கூரையின்றி, கிராதி அறை, பக்க வாட்டு அறைகள் இன்றி கோபுரம் ஒரு கட்டு மட்டும் உள்ள இந்நிலையிலேயே, கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் 1847 டிசம்பர் 9-ம் தேதி ஆலயத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். இம்மகத்தான ஆலயம் கட்டப்படக் கனம் ஜாண் தாமஸ் ஐயர் ரூ. 100/–ம், மெய்ஞானபுரம் சபையும் சேகரமுமாகச் சேர்ந்து ரூ. 915/-ம், இதர நண்பர்கள் மூலம் ரூ 564/-ம் தந்தது போக, மீதமெல்லாம் கனம் ஜாண் டக்கர் ஐயர் இங்கிலாந்திலிருந்து சேகரித்தனுப்பியதே! மொத்தச்செலவு ரூ. 11000 ஆகும்.

பிரதிஷ்டை ஆராதனையில் 85 பேர் நற்கருணை பெற்றனர். பண்டிகையின் முடிவில் அசனம் நடந்தது.

பின் 1858-ல் திருச்சியிலிருந்து ஞானஸ்நானத் தொட்டி செய்து வரப்பெற்றுப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இதன்பின் 1859-ல், நாம் இன்று காணும் ஆலயத்தளம், Edward Story, Egs, Madras Civil Service அவருடைய நன்கொடையாகும். இறுதியாக 1885 ஜனவரி 22-ல்

பூரணமான கோபுரம், ஆலயத்தின் முகடு, கிராதி அறைகள் எல்லாவற்றையும் சேர்த்துக் கனம் சார்ஜன்ட் பேராயரால் மறுபிரதிஷ்டை செய்யப்பட்டது. 1937 டிசம்பரில் கனம் ஜாண் தாமஸ் இந்தியா வந்த நூறு ஆண்டு நினைவாகக் கனம் ஜாண் சாமுவேல் ஐயர் காலத்தில் ஒரு நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது. 1947-ல் ஆலயம் கட்டி முடித்த நூறு ஆண்டு நினைவாக ஒரு நூற்றாண்டு கனம் சுஜேனா பால்மாணிக்கம் ஐயரவர்கள் காலத்தில் கொண்டாடப்பட்டது. 1949 டிசம்பர் 4-ல், இந்த ஐயரவர்கள் காலத்தில் தென்பாகத் தட்டடி புதுப்பிக்கப்பட்டுப் பிரதிஷ்டையானது. பின்பு ஆலயக்கூரை புதுப்பிக்கப்படும் திட்டம் கனம் எம். டி. ராஜமணி ஐயரவர்கள் காலத்தில் 1952 மே மாதம் ஆரம்பிக்கப்பட்டு, ரூ. 14000 சேமிக்கப்பட்டிருந்தது. தொடர்ந்து வந்த கனம் எம். டி. ராஜமணி ஐயரவர்கள் காலத்தில், ரூ 50/- குடும்ப வரிபோட்டு ரூ. 61000/- செலவில் கூரை பழுது பார்க்கப்பட்டு 1963 ஜனவரி 24-ல் குமரிப் பேராயர் ஜே ஆர். எச் ஞானதாசன் அவர்களால் பிரதிஷ்டை சிறப்பாய் நடந்தது.

அன்றொரு நாள், பள்ளிக்கூட கட்டிடம் பார்க்க வந்த ஹிந்து பிராமண தாசில்தார், இவ்வளவு மகத்தான ஆலயமும், ஆலய கோபுரமும் மிகப் பழுதடைந்துள்ளதே, உங்கள் கண் களுக்குப் புலப்படவில்லையா? என வினவினார். இது தேவச்சத்தமாகக் கொண்டேன். நமது மகா சபை கூடியது. தேவச்சத்தம் அங்கே தொனித்தது. ஆலயம், கோபுரம் முழுமையும் பழுது பார்க்க முடிவெடுத்தது. ரூ. 100 வரி விதித்தது. நன்கொடைகளும் குவிந்தன. பேராயத்தின் நிர்வாகக் கமிட்டியின் சம்மதம் பெற்றோம். வேலையைச் செப்டம்பர் 84-ல் ஆரம்பித்தோம். "திடன்கொள்ளுங்கள். வேலையை நடத்துங்கள்......நான் உங்களுடனே கூட இருக்கிறேன்" (ஆகாய் 2:4) என்ற சேனைகளின் கர்த்தருடைய சத்தம் தொனித்தது. இத்தேவச் சத்தத்துக்கும் சித்தத்துக்கும் இத்தலை முறையினர் தம்மை முழுவதுமாக ஒருமனமாக ஒரு குடும்பமாக ஒப்பு வித்தனர், ஜெபித்தனர், கொடுத்தனர், செயலாற்றினர். தேவகரம் நம்மோடிருந்து யாவற் றையும் சிறப்பாய் நடத்தி தந்துள்ளது 1968 அக்டோபர் 9-ல் கோபுர நூற்றாண்டு கொண் டாடியிருக்க வேண்டும். ஏற்கனவே ஆலய நூற்றாண்டு முடிந்த நிலையில் ஆலயமும் கோபுர மும் முழுமையாக மறு பிரதிஷ்டையான ஜனவரி 22, 1885ஐ மனதில் கொண்டு, மறக்கப்பட்ட கோபுரப் பிரதிஷ்டைப் பண்டிகையை இன்று 22-1-1985-ல் கோலாகலமாய்க் கொண்டாடுகி றோம். கொக்கரிக்கிறோம்.

## ஒரு எச்சரிப்பு !

கனம் தாமஸ் ஐயர் மிராசுதார் என்ற ஒருவரை நேசித்து பணியில் பயன்படுத்தினார். ஒரு குற்றத்திற்காக கண்டித்தார். உடனே இவர் ரோமானித்த சபையில் சேர்ந்து நமது சபைக் குத் துன்பம் விளைவித்தார். ஐயரவர்கள் மனம் நொந்தார்கள்; ஆனால் மிகவும் அமைதி காட்டி னார்கள். மிராசுதாருக்கு ஏரோதின் நோய் கண்டது. நாற்றமெடுத்தான். நாகியற்றவனா னான். மனைவி பிள்ளைகளுங்கூடக் கைவிட்டனர். என மரணமடைந்தான். விதைத்ததை சீக்கிரமாக அறுத்துக் கொண்டான் தேவ ஜனமே. ஜாண் தாமஸ் இங்கே உயிரை கொடுத்து சம்பாதித்த சபை. எப்புல்லுருவியும் உன்னைப் பிரித்துவிடாதபடி எச்சரிக்கையாயிரு.

## நன்றி நவில்கிறோம்

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களுக்கும், அவர்களைத் தொடர்ந்து பணியாற்றிய அனைத் துத் திருப்பணிவிடையாளர்களுக்கும், இதர எல்லா ஊழியர்களுக்கும் நன்றி. குறிப்பாக இவ் வாண்டு கோபுரப் பணியைச் சிறப்பாய் முடித்துக்கொடுத்தவர்கள், தொடர்ந்து ஆலயத்தின் உள்ளும் புறமும், இரவு பகலாய வேலை செய்து, குறிப்பிட்ட நேரத்தில் முடித்துத் தந்தவர்கள், மேல்பார்த்தவர்கள், எல்லாக் கமிட்டிகளின் அங்கத்தினர்கள், வரி தந்து ஒத்துழைத்தவர்கள், 500, 1000, 5000 என நன்கொடைகளை வாரி வழங்கியவர்கள், எல்லாருக்கும் இதயம் கனிந்த நன்றி

## ஆசி கூறுகின்றோம்

இம்மாதம் நிகழ இருக்கும் பண்டிதர் அக்பர் ஹக் விழா பேராலயத்தின் குருமார் ஆவிக் குரிய கூட்டம், தமது தூய பவுலின் கோபுர முத்திரை வெளியீடு போன்றவற்றையும் தோன்ற இருக்கும் கயிறு நூற்புத் தொழில் (chour industry) அச்சுக்கூடம் (Printing press) பெண்கள் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி (Rev John Thomas College of Education for woman) ஆகியவற் றை இவ்வாண்டினில் துவக்கி, வரலாறு படிப்பதை விட்டு, வரலாறுபடைத்து காட்டுவோமாக !

"கர்த்தர் தமது ஜனத்துக்குப் பெலன் கொடுப்பார். கர்த்தர் தமது ஜனத்திற்குச் சமாதானம் அருளி, அவர்களை ஆசீர்வதிப்பார்" (சங்கீதம் 29:11).

Rev. Dr. B. Dharmarajan, D D:

மறைந்த பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி அவர்களுக்கு நமது பாஸ்ட்ரேட் அனுப்பிய இரங்கல் செய்திக்குப் பிரதம மந்திரியின் அலுவலகத்திலிருந்து நமக்கு வந்த பதில் கீழே தரப்படுகிறது.

November 19—12—1984.

On behalf of the Prime-Minister, I thank you for your sympathy and condolences on the tragic death of the late Prime Minister Shrimathi Indira Gandhi.

(Sd) (Wajahat Habibullah)



## மறைந்த பிரதமர் இந்திரா காந்தியும் திருமறையும்

1980 அக்டோபர் 2ம் தேதி திடீரென, டெல்லியிலுள்ள வேதாகமப் புத்தக சாலைக்குத் தொலைபேசியில், "எனக்கு அவசரமாக ஒரு வேதபுத்தகம் வேண்டும், அனுப்ப முடியுமா?" என்று கேட்டார்கள். உடனே தானே ஹிந்தியிலும், ஆங்கிலத்திலுமான "Good News Bible" இரு வேதபுத்தகங்களைக் காரியதரிசி அம்மையாரிடம் கொண்டு கொடுத்தனர் உடனடியாக வேண்டும் என்று அவசரப்படுத்தியதற்காக மன்னிக்கவும் என்று சொன்னார்கள். மேலும், தன் நண்பர்கள் பலருக்கு அன்பளிப்பாகக் கொடுக்க இன்னும் சில வேதாகமங்களை (King James Version) கேட்டுப் பெற்றுக் கொண்டார். அம்மையார் பொதுக்கூட்டங்களில் பேசும் போதும், நண்பர்களுக்கு எழுதும் போதும் மேற்கோள் காட்டுவதையும் செய்தி மூலம் அறிய முடியும் அம்மையாருக்கு வேதத்திலிருந்த விருப்பம் நமக்கும் உண்டாகட்டும்.

பரி. பவுலின் ஆலய நூற்றாண்டு விழா மலர் 24.1.85

# செவிவழிச் செய்திகள்......

திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தின் தென் பகுதியில் தென்னிந்தியாவிலேயே சிறப்பானதொன்றாக அமைந்து, இந்தியக் கட்டிடக் கலைக்கும், ஆங்கிலக் கட்டிடக் கலைக்கும் எடுத்துக் காட்டாய் விளங்கிக்கொண்டிருக்கும் மெய்ஞ்ஞானபுரம் தூய பரிசுத்த பவுலின் ஆலயத்தைப் பற்றியும், தன்னையே தியாகம் செய்து இத்தனை மாட்சியையும் மகத்துவமும் பொருந்திய தேவாலயத்தைக் கட்டுவித்த பரிசுத்தவான் ஜாண் தாமஸ் ஐயரவர்களைப் பற்றியும் செவிவழியாய்க் கேள்விப்பட்டு வருகின்ற செய்திகளைத் தொகுத்துத் தருவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

P. Kutty Jaskar Meignanapuram

## இன்றும் உலவுகிறார்

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் மறைந்து பல ஆண்டுகள் ஆகியும், இன்னும் நமது ஊரோடு ஒன்றாகக் கலந்து, நமக்காக நமது ஊரிலே ஏற்படும் கொள்ளை நோய், காலரா, வைசூரி போன்ற வியாதிகள் நீங்க பிதாவினிடத்தில் வேண்டுதல் நடத்தியும், இரவு நேரத்தில் ஆவி ரூபமாக நம் ஊரைச் சுற்றி ஆகாயத்தில் வலம் வரும் காட்சி நம்மவரில் அநேகர் இன்றும் கண்டு களித்து வரும் அபூர்வ காட்சியாகும்.

## ஐந்து பெட்டி மண்

நவம்பர் மாதத்தில் ஆலய கோட்டை சுவர் புதுப்பித்துக் கொண்டிருக்கும்போது, நமது ஊரைச் சேர்ந்த திரு. பொ. யோவான் என்ற பெரியவர் மண் சுமந்து ஆலய விளாகத்தில் போட்டுக் கொண்டிருந்தார். அவரை அணுகி மண் சுமந்து போட்டீர்களே ஏதாவது நேர்ச்சையா என்று கேட்டபோது, அவர் இது நேர்ச்சையல்ல, பரிசுத்தவான் ஜாண் தாமஸ் ஐயரவர்களின் கட்டளை என்றார். வியப்போடு விவரம் என்ன என்று கேட்டேன். அவர் கூறின வரலாறு என்னை மேலும் வியப்புக்குள் ஆழ்த்தியது.

திரு. பொ. யோவான் அவர்களும், திரு. மாற்கு தானியேல் அவர்களும் இன்னும் இரண்டுபேரும் ஒருநாள் இரவு ஆலயத்திற்கு முன்னால் பேசிக்கொண்டிருக்கும்போது "ஜாண் ஐயரவர்கள் முன்பெல்லாம் வெள்ளைக் குதிரையில் இரவு நேரத்தில் ஆவி ரூபமாக நமது ஊரைச் சுற்றி வருவார் என்று கூறுவார்களே! தற்போது அவர் கட்டுவித்த ஆலயத்தை நாம் புதுப்பித்து கொண்டிருக்கிறோமே' இது அவருக்கு பிரியமானதாக இருக்குமா? அவருடைய சித்தம் என்ன என்று அவர் நமக்கு தெரியப்படுத்துவாரா?" என்று சிந்தித்தார்கள். மேலும், "இன்று நாம் அனைவரும் நன்றாக ஜெபித்துவிட்டு படுக்கைக்குச் செல்வோம், நமது ஜாண் தாமஸ் ஐயரவர்களின் தரிசனம் கிடைக்குமா என்று பார்ப்போம்" என்று தீர்மானித்து இரவு கலைந்து சென்றார்களாம். இரவு ஒருவர் அதுபற்றி கூறி ஜெபம் செய்ய மறந்து விட்டார். மற்றவர்கள் ஜாண் தாமஸ் ஐயரவர்களைப்பற்றி வேண்டிக்கொண்டு நித்திரைக்குச் சென்றார்கள்.

## ஆலய விளாகத்தில்.....

இரவு திரு. மாற்கு தானியேல் அவர்களுக்கு ஜாண் தாமஸ் ஐயரவர்கள் தரிசனம் ஆனார்கள். நமது ஆலய விளாகத்தில் உள்ள மேடையில் ஜாண் தாமஸ் ஐயரவர்களும், தற்போது நமது ஊரில் பணிபுரிந்து வரும் சேகர குருவானவர் அறிவர் B. தர்மராஜன் அவர்களும் கலந்து உரையாடுவது போன்ற ஒரு காட்சி. மற்றவர்கள் கூடி இருக்கிறார்கள். அப்போது ஜாண் தாமஸ் ஐயரவர்கள் திரு. மாற்கு தானியேல் அவர்களைக் கூப்பிட்டு, "யோவானை ஐந்து பெட்டி மண் சுமந்து போடச் சொல்லு" என்று கட்டளை இட்டாராம். அதற்கு திரு. மாற்கு தானியேல் அவர்கள், "ஐயா, அவர் மூட்டுவலி, குறுக்குவலி என்று சொல்லிக் கொண்டிருக்கிறாரே? அவரை எப்படி......" என்று பேச ஆரம்பித்தாராம்.

உடனே மீண்டும் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் யோவானை ஐந்து பெட்டி மண் சுமந்து போடச்சொல்லு என்று கட்டளை இட்டாராம்,

இந்தத் தரிசனத்தைத் திரு. மாற்கு தாவியேல் அவர்கள் திரு. பொ. யோவானிடம் கூற, அவரும் ஜாண் தாமஸ் ஐயரவர்களின் கட்டளைக்கு அடிபணிந்து, ஆலய மண் கோட்டைச் சுவரை இடித்த மண்ணை, மறுநாள் காலையில் சென்று சுமந்து ஆலய வளாகத்திற்குள் போட்டுக் கொண்டிருந்தார். அது மட்டும் அல்ல, ஆலயத்திற்கு தென்புறமுள்ள கோட்டைச் சுவரை இடித்துப் புதிதாகக் கட்டுவதற்குப் பலரை அணுகி நன்கொடை வசூல் செய்து கோட்டைச் சுவர் எழுப்புவதற்குத் தீவிர முயற்சியும் மேற்கொண்டார்.

இப்பொழுதும், உண்மையாக உபவாசமிருந்து வேண்டுதல் நடத்தி, நமது ஆலயத்தில் வழிபாடுகள் செய்து கொண்டிருக்கும்போது அநேக ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் தரிசனமாகிக் கொண்டிருக்கிறார்.

## பி. எட் கல்லூரி

அந்த புனிதவான் ஜாண் தாமஸ் ஐயரவர்களின் பெயரைத் தாங்கி நமது ஊரில் மகளிர் ஆசிரியைப் பயிற்சிக் கல்லூரி ஒன்று வரும் கல்வி ஆண்டிலே ஆரம்பம் ஆக இருக்கிறது. அதற்காக நாம் அனைவரும் நம்மால் ஆன பொருள் உதவியைக் கொடுப்பதோடல்லாமல் ஜெபிக்கவும் கடமைப்பட்டுள்ளோம்.

## ஆலயத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்ட இடம்

பரிசுத்த பவுலின் ஆலயத்தை முதன் முதலாய் நமது ஊரை அடுத்த சோலைகுடியிருப்பு என்னும் தேரிபாங்கான இடத்தில் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் கட்ட திட்டமிட்டு அஸ்திபாரம் தோண்டினாராம். மறுநாள் சென்று பார்த்தபோது அஸ்திபாரம் மண் சரிந்து தூர்ந்து போய் விட்டதாம். அதோடு அந்த இடம் சொறு மணலாக இருந்ததால் அந்த இடத்தில் ஆலயம் கட்ட இருந்த திட்டம் மாற்றப்பட்டதாம்.

## மருதூர்கரை ஐயர்விளை

பின்னர் மருதூர்கரை அருகிலுள்ள ஐயர்விளை என்று அழைக்கப்படுகிற இடத்தில் ஆலயத்தைக் கட்ட திட்டமிட்டாராம். அந்த இடத்தில் சில வேலைகள் செய்த பின்னர், ஏதோ காரணத்திற்காக அந்த இடத்தில் ஆலயம் கட்டும் திட்டமும் கைவிடப்பட்டிருக்கிறது. அதன் பின்னர்தான் தற்போது அமைந்துள்ள நெடுவிளை என்ற கிராமத்தில் ஆலய கட்டுமான வேலைகள் ஆரம்பம் ஆனது.

## பார்வரை அஸ்திபாரம்

அஸ்திபாரம் பார்வரைத் தோண்டப்பட்டுள்ளதாம். ஆலயத்தைச் சுற்றி மதில் சுவர் கட்டப்பட்டுள்ள இடத்திலிருந்தே அஸ்திபாரம் போடப்பட்டு படிப்படியாக சுருக்கிக் கொண்டு வந்து இந்த பிரமாண்டமான ஆலயம் கட்டப்பட்டுள்ளது. கிட்டத்தட்ட 20 அடி ஆழமான அஸ்திபாரம் போடப்பட்டிருக்கலாம் என்றும், மேலும் இரும்புக் கம்பிகளும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்றும் கருதுவதற்கு இடமுண்டு.

## கால்டுவல் ஐயர்

இடையன்குடியை உருவாக்கியவரும், நெல்லை மாவட்ட வரலாற்றை எழுதியவருமாகிய கனம் கால்டுவல் ஐயரவர்கள், நமது ஜாண் தாமஸ் ஐயரவர்களுக்கு நெருங்கிய நண்பராவார். அவர் தமது வரலாற்று நூலில் ஜாண் தாமஸ் ஐயரவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, ‘ He is a best builder and singer’’ என்கிறார். கட்டிடம் கட்டும் கலையில் ஐயரவர்கள் கைதேர்ந்தவர் என்பது, அவர் இங்கு எழுப்பிய இந்த மகத்தான ஆலயமே சிறந்த எடுத்துக்காட்டு !

## வேலையாட்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட விதம்

ஆலய கட்டுமானத்திற்கு தேவைப்பட்ட மண் சோலைகுடியிருப்புதேரியில் எடுக்கப்பட்டதாம். காலையில் சுமார் 200 பேர் அந்த தேரிக்குச் சென்று மண்ணை பொலிவிட்டு தூவி மண்ணை சேகரிக்க வேண்டும். பொடி மண் வேறாக பருமணல் வேறாக பிரித்து காட்ட வேண்டுமாம். மாலையில் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் அங்கு சென்று பார்வையிடும்போது மிக அதிகமாக மண் கூட்டி இருக்கும் சிலரை வேலைக்கு வேண்டாம் என்று அனுப்பிவிடுவாராம். அது போல குறைவாக மண் கூட்டி இருக்கும் சிலரையும் வேலைக்கு வேண்டாம் என்று அனுப்பி விடுவாராம். மிகஅதிகமாக மண் கூட்டி இருக்கும் வேலையாள்கள் அவசரப்பட்டு வேலை செய்திருக்கி முடி

றார்கள். அவர்கள் வேலையில் சுத்தம் இருக்காது, நிதானமும் இருக்காது என்பது அவருடைய கருத்து. அதுபோல மிக குறைவாக மண் கூட்டி இருப்பவர்கள் சோம்பேறிகள், அவர்கள் உடல் வருந்தி வேலை செய்ய மாட்டார்கள் 'என்பது ஐயரவர்களின் கருத்து. இப்படி ஆலயத்திற்கு சித்தாள்களும், கொத்தனார்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்களாம்.

### கால் துட்டு

ரூபாய், அணா, பைசா ஆகியவற்றை நம்மில் அநேகர் மறந்துவிட்டோம். ஆலய கட்டுமான நேரத்தில் 'துட்டு' நாணய முறை பழக்கத்தில் இருந்தது. சித்தாள்களுக்கு 'கால் துட்டு' ஒரு ரூபாயில் 192 பகுதிகளில் ஒன்று சம்பளமாக கொடுக்கப்பட்டதாம். கொத்தனார்களுக்கு 1¼ துட்டு. அதாவது 5 கால் துட்டு சம்பளமாக வழங்கப்பட்டதாம். கட்டுமானத்தில் ஒவ்வொரு படியும் ஐயரவர்களின் கண்காணிப்பில் கச்சிதமாக நடைபெற்றது.

### பதனீர்

கட்டுமானத்திற்கு வேண்டிய சுண்ணாம்பு கொஞ்சம் கொஞ்சமாகவே கொண்டு வரப்பட்டது. காரணம், சுண்ணாம்பு குழைப்பதற்கு பதனீர் பயன்படுத்தப்பட்டது. ஒவ்வொரு குடும்பத்தினரும் ஒவ்வொரு முறை பதனீர் இலவசமாக கொடுத்தார்களாம். பதனீர் கலந்து சுண்ணாம்பு குழைக்கப்பட்டதால் சீக்கிரம் சுண்ணாம்பு கெட்டுவிடும் என்பதைக் கருத்தில் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக சுண்ணாம்பு பெறப்பட்டதாம்.

### வெண்ணெய் போல்

வரிசையாக அம்மிகள் போடப்பட்டு சாந்து அம்மியில் அறைக்கப்பட்டது. பதனீரை 'வெதுப்பி' கிட்டத்தட்ட 'கூப்பனி' பருவத்தில் சாந்துடன் கலந்து 'கடுக்காய்' தண்ணீரும் சேர்த்து அறைக்கவேண்டும். அறைப்பவர் நன்றாக அறைத்து விட்டோம் என்று அவராக முடிவெடுத்துச் சாந்தை அம்மியிலிருந்து வழித்து எடுத்து விட முடியாது. ஐயரவர்கள் ஒவ்வொரு அம்மியிடமும் வருவாராம். விரலை வைத்து பிதுக்கி பார்த்து திருப்தி சொன்ன பிறகுதான் சாந்தை வழித்து எடுக்கவேண்டும். உதட்டைப் பிதுக்கி விட்டால் மீண்டும் அவர் வரும்வரை அம்மிகளும் அறைத்துக் கொண்டே இருக்கவேண்டும். வெண்ணைபோல் சாந்து அறைக்கப்பட்டு ஒரு கல்லுக்கும் மற்றொரு கல்லுக்கும் இடையே போடப்பட்டிருக்கும் சாந்து கனம்கூட தெரியாமல்-கற்+ளை. சும்மா அடுக்கி வைக்கப்பட்டதுபோல அழகிய ஆலயம் கட்டப்பட்டது. இன்னும் சிலர் தாங்களாக முன் வந்து சாந்து குழைக்கும்போது தேன், முட்டை போன்றவற்றைத் தந்தார்கள் என்றும் கூறப்படுகிறது. இப்படியாக சாந்துடன் முட்டை, தேன், பதனீர் கூப்பனி, கடுக்காய் சாறு கலந்து கட்டப்பட்டது தூய பவுலின் ஆலயம்.

### எப்படித்தான்......?

போக்குவரத்து வசதியும் மற்றவையும் இல்லாத காலத்தில் இவ்வளவு கல்லையும் பன்னம்பாறையில் இருந்து எப்படித்தான் கொண்டு வந்தாரோ? எப்படித்தான் சாரங்கள் அமைத்தாரோ? ஒரு பெரிய ஆள் ஆவி சுற்றி பிடிக்கமுடியாத பெரிய மகுடக்கல்லை எப்படித்தான் 192 அடி உயரத்திற்கு கொண்டு சென்றாரோ? அது அவருடைய சுயபலம் இல்லை! ஆண்டவர் அவரோடு இருந்ததால் தான் இப்படிப்பட்ட அபூர்வ காரியத்தை அவரால் நடாத்த முடிந்தது. நெகேமியாவுடன் இருந்த யெகோவா ஜாண் தாமஸ் ஐயரவர்களோடும் இருந்திருப்பார் அல்லவா?

### அன்புக் கட்டளை

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் மிகவும் அதிகார தோரணை மிக்கவர்களாம். ஆழ்ந்த யோசனையும் கூரிய அறிவும் கொண்டவர்கள். யாரை அனுப்பினால் ஒரு காரியத்தை முடிக்க முடியும் என்பதை நன்கு உணர்ந்தவர். ஆலய வேலை நடந்துகொண்டிருக்கும்போது சில நேரங்களில் பன்னம்பாறையிலிருந்து கல் வர தாமதமாகிவிடுமாம். உடனே யாரை அனுப்பினால் கல் சரியான நேரத்திற்கு வந்து சேரும் என்பதை உணர்ந்த கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் தனது வெள்ளைக் குதிரையில் ஏறி வந்து பெரியநாயகம் முக்கந்தரைத் தேடி வந்து ''முக்கந்தர் நீர் நாளை அதிகாலை பன்னம்பாறை போகிறீர். நாளை வேலைக்கு கல் இங்கு வந்து சேர வேண்டும்'' என்று கட்டளை இடுவாராம். மறு பேச்சுப் பேசாமல் முக்கந்தர் அன்பு கட்டளைக்கு அடிபணிந்து, அதிகாலையில் புறப்பட்டுச் சென்று அன்றைய வேலைக்கே கற்களைக்கொண்டு வருவாராம். அவருடைய தெய்வக்களை பொருந்திய முகத்தைக் கண்டபின் எவர் மறுத்துப் பேச முடியும் ?

## தவறை உணரும் ஜாண் தாமஸ்

சொந்த தேசத்தையும் ஜாதி ஜனத்தையும் விட்டு தன்னையே மெய்ஞ்ஞானபுரத்திற்காக தத்தம் செய்த ஜாண் தாமஸ். நிரம்பப் படித்த மேதையாக இருந்தபோதிலும், தன்னுடைய தவறுக்காக உடனே வருத்தம் தெரிவிக்கும் நல்ல பண்பினைப் பெற்றிருந்தார்.

ஆலயம் கட்டிக்கொண்டிருக்கும்போது ஒரு கொத்தனுர் (மேஸ்திரி) தளமட்டத்தை (Base level) மேலும் உயர்த்தி அமைக்க வேண்டும் என்று திரு கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களிடம் வாதிட்டார். ஐயரவர்கள் கொத்தனாருடைய கருத்தை ஏற்கவில்லை. அதோடு கொத்தனாரை என்னைவிட உனக்கு அதிகம் தெரியுமோ? என்று விரட்டிவிட்டார். கொத்தனாரும் பேசாமல் இருந்துகொண்டார். ஆலயவேலை முடிந்தபின், அதன் அமைப்புகள் எப்படி இருக்கின்றன என்று பார்ப்பதற்கு ஐயரவர்கள் நடுத்தெருவின் மேல்கோடியில் நின்று பார்வையிட்டார். பார்த்த பார்வையிலேயே தன்னுடைய தவறை உணர்ந்து கொண்டார். ஆம், ஆலயம் எங்கோ பள்ளத்தில் இருப்பதுபோல் தோன்றியது. அந்த கொத்தனார் கூறியதுபோல் தளமட்டத்தை மேலும் இரண்டடி கூட்டி இருந்தால ஆலயம் இன்னும் எவ்வளவு எடுப்பாகத் தெரிந்திருக்கும். ஐயோ, கொத்தனார் பேச்சைக் கேட்காமல் போய்விட்டேனே என்று வருந்தினார். நேராக அந்தக் கொத்தனாரைத் தேடி வந்தார். தன்னுடைய தவரை அவரிடம் கூறி வருந்தினார். கொத்தனாரை வெகுவாய்ப் பாராட்டினார். பின்னர் பல காரியங்களைக் கொத்தனாரிடம் கலந்து செய்தாராம்.

## பிரிக்க முடியாத வெள்ளைக் குதிரை

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் எங்கு சென்றாலும் வெள்ளைக் குதிரை மீது ஏறித்தான் செல்வாராம். அந்த வெள்ளைக் குதிரையும் அவரும் பிரிக்க முடியாதவை கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் இறந்து பல ஆண்டுகள் வரை நம் ஊர் மக்கள் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் ஆவி வெள்ளைக் குதிரையில் ஏறி இரவு நேரங்களில் நமது ஊரை காவல் செய்து வருகிறார் என்று நம்பினார்கள். பலர் தரிசனம் கண்டார்கள். பரிசுத்தவான்கள் தேவனின் அனுமதி பெற்றுத் தம் மக்களைக் காணப் பூலோகம் வருவார்கள் என்று வேத ஆராய்ச்சியாளர்கள் கூறுவது கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் காரியத்தில் கச்சிதமாக பொருந்துகிறது அல்லவா!

## ஆலய மகிமை

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் பரிசுத்த பவுலின் ஆலயத்தை எவ்வளவாக நேசித்து இருக்கின்றார். அந்த ஆலயத்தை அமைக்க எத்தனை பாடுகள் பட்டிருப்பார். ஆண்டவரிடம் எப்படி எல்லாம் வேண்டுதல் நடாத்தி இருப்பார். ஆண்டவரிடம் நேரடியாகப் பேசி முடிவெடுத்து ஒவ்வொரு அடியும் கட்டி இருப்பார் அல்லவா? இந்த ஆலயத்தில் வாசம் செய்யும் ஏசு கிறிஸ்து இந்த ஆலயத்தில் வந்து வேண்டுதல் நடத்தி மன்றாடி கேட்கும் காரியங்கள் அனைத்தையும் நிறைவேற்றி கொடுக்கிறார் அல்லவா?

சாலமோன் ஞானி தான் கட்டிய எருசலேம் தேவாலயத்தின் திசை நோக்கி எந்த மூலையில் இருந்து வேண்டுதல் செய்யும் எவருடைய வேண்டுதலையும் தேவரீர் ஏற்றுக்கொண்டு அவர்கள் வேண்டுதலை நிறைவேற்றி கொடுக்க வேண்டும் என்று கர்த்தரிடம் மன்றாடி கேட்டுக்கொண்டு வரம் பெற்றதுபோல, கனம் ஜாண் தாமஸ் ஐயாவர்களும் கர்த்தரிடம் வரம் பெற்றிருப்பாரோ என்று எண்ண வேண்டியுள்ளது. இந்த ஆலயத்தில் வந்து வேண்டுதல் நடத்தி நன்மைகளைப் பெற்றுக் கொண்டவர்களைக் கணக்கிட்டுக் கூற முடியுமா?

## எங்கும் அலைய வேண்டாம்

சங்கீதக்காரன் ''உமது ஆலயத்தின் வாசல்படியில் காத்திருப்பதையே தெரிந்து கொள்வேன்'' என்ற கூற்றின்படி எத்தனையோ பேர் அன்னாள் தன் இருதயத்தில் இருந்தவற்றை எல்லாம் தேவனுடைய சமுகத்தில் ஊற்றியதைப்போலத், தங்கள் உள்ளத்துப் பாரங்களைத் தேவாதி தேவன் உலாவுகின்ற தூய பவுலின் ஆலயத்தில் ஊற்றி மன அமைதியும் சமாதானமும் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

இத்தனை மகத்துவமும் வல்லமையும் நிறைந்த எம்பெருமான் ஏசு கிறிஸ்து வாசம் செய்யும் இந்த ஆலயத்தில் தொழுகை நடந்து கொண்டிருக்கும்போது, இதை விட்டு விட்டு ஆவியையும்-எழுப்புதலையும் தேடி, அங்கும் இங்கும் அலையும் கூட்டமே, உங்கள் அறியாமையையும்-அறிவீனத்தையும் எண்ணி அனுதாபப்படுகிறேன். அங்கிங்கென்று அலையாமல், அமைதியோடு, ஆர்ப்பாட்டம் அகற்றி ஆண்டவன் சந்நிதானத்தில், தூய பவுலின் ஆலயத்தில் அமர்த்திருந்து அவரே தேவன் என்று அறிந்து அனுதினமும் அனுபவிப்போமாக!

—எஸ். டேவிட் தனசிங், எம். ஏ. பி. எட்.



# கர்த்தர் என் உயர்ந்த அடைக்கலம்



I அழகான தேவாலயம்!
பழமையான தேவாலயம்!!
நெடிதுயர்ந்த கோபுரம்!
நூற்றாண்டைக்கண்ட கோபுரம்!!

பரி. பவுலின் தேவாலயக் கோபுரத்தின் நூற்றாண்டை துதிகளுடன் சிறப்பாகக் கொண்டாடும் நம் யாவருக்கும் தேவன் தாமே தமது பூரண ஆசீர்வாதத்தைப் பொழிந்தருளுவாராக!

தாவீது சங். 18: 2ல் கர்த்தர் என் உயர்ந்த அடைக்கலமாய் இருக்கிறார் என்று கூறுகிறார். கோபுரத்தை காணும் போது உயர்ந்த அடைக்கலமான கர்த்தரையே நினைவு கூறுகிறோமல்லவா

தன் வாழ்க்கையில் கர்த்தரை உயர்ந்த அடைக்கலமாகக் கொண்ட கர்த்தருடைய பிள்ளைகளுக்கு முன் மாதிரியான காலேபைக் குறித்துச் சற்றே இந்நேரத்தில் தியானிக்க விழைகிறேன்.

''எப்புன்னேயின் குமாரனாகிய காலேப் மாத்திரம் அதைக் காண்பான்'' (உபா. 1: 36)

காலேபின் பார்வை உயரப் பார்வை என்று கூறலாம். தன் உயர்ந்தஅடைக்கலமாம் கர்த்தரையே பார்த்தார், நம்பினார், விசுவாசித்தார்.

1 தேவனை உயர்ந்த அடைக்கலமாக கொண்ட காலேப் தன் வாழ்க்கையைத் தேவனுக்கு ஒப்புக் கொடுத்திருந்தார். யோசு 14: 8ல் '' நானோ என் தேவனாகிய கர்த்தரை உத்தமமாய்ப் பின் பற்றினேன் ''என்று கூறுகிறார். எந்த சூழ்நிலையிலும், அவர் பார்வை தன் உயர்ந்த அடைக்கலமாம் தேவனிடமே இருந்தது உபா 1: 33ல் மற்றவர்களைக் குறித்துக் கர்த்தர். '' நீங்கள் விசுவாசியாமற் போனீர்கள்'' என்று கூறுகிறார். காலேபோ தேவனை விசுவாசித்தார்.

'' உம்மை உறுதியாய்ப் பற்றிக் கொண்ட மனதை உடையவன் உம்மையே நம்பியிருக்கிறபடியால் நீர் அவனைப்பூரண சமாதானத்துடன் காத்துக்கொள்வீர்''என்ற ஏசாயாவின் அனுபவம் காலேப்பிடம் இருந்தது. (ஏசா26:3) நம்மிடமும் அது தேவை.

2 தேவனைத் தன் உயர்ந்த அடைக்கலமாய்க் கொண்ட காலேப், சூழ்நிலையின் நெருக்கடியில் தப்பியோட நினைத்ததில்லை.

எண் 13: 31-33ல் பத்துப்பேர் கானான் தேசத்தைக் குறித்த துர்ச் செய்தியை பரம்பச் செய்தனர். காலேபோ எண் I4: 7,8ல் தைரியமாகத்தாங்கள் கண்டு வந்ததை அப்படியே சொல்லுகிறதைக் காண்கிறோம். யோசுவாவும் இவரும் பத்துபேருடன் கானான் தேசத்தில் இராட்சதர்களைக் கண்டனர். ஆனால் அது பாலும் தேனும் ஓடுகிற தேசம் என்பதையும் அவர்கள் கண்டனர்.

கர்த்தருடைய பிள்ளைகள் குறையின் மத்தியிலும் நிறைவைக் காண்பதாலேயே தப்பி ஓடுகிறதில்லை.

3 காலேப் எப்போதும் மேலானவைகளையே கண்டார். எண் 13: 23ல் நல்ல திராட்சைகளைக் கண்டார்.

ஒரேகுலை! ஆனால் இரண்டு பேர் தடியிலே தூக்கி வருகின்றனர்!!

உயர்வான காரியங்களுக்கு அழைக்கப்பட்டிருக்கும் நாம், துன்பங்கள் மத்தியிலும் ஆவியின்கனிகளை அறுவடை செய்யும் படிக்கே அழைக்கப்பட்டிருக்கிறோம்.

4 உத்தமமாக தேவனை பின் பற்றின காலேப் தேவன் அளித்த சந்தர்ப்பங்களை உடனடியாக உபயோகிக்க விரும்பினார்.

எண் 13: 3ல் அவர், " நாம் உடனே போய் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவோம்; " என்கிறார்.

கர்த்தருடைய பிள்ளைகளின் வாழ்க்கையில் "உடனே" என்ற சொல்லுக்கு மிகவும் ஆழ்ந்த பொருள் உண்டு. தேவனுடைய சொல்லுக்கு, அழைப்புக்கும், திட்டத்திற்கும் உடனே கீழ்படியும் போது, உன்னத வாக்குத் தத்தங்களை நாம் சுதந்தரித்துக் கொள்கிறோம்.

5 தேவனே தனது பெலன் என்பதைக் காலேப் உணர்ந்திருந்தார்,
எண் 13- 3ல் கானான் தேசத்தைக் குறித்துப் பேசும் போது, ,, நாம் அதை எளிதாய் ஜெயித்துக் கொள்ளலாம்,, என்றார்.

எங்கிருந்து வந்தது இந்த தைரியம்? பத்துப்பேர் பதறும் போது, இவர் எளிதாய் ஜெயிக்கலாம் என்றால் எத்தனை தூரம் திடமனதும், தைரியமும் இருந்திருக்க வேண்டும்!

அது மட்டுமல்ல 45 ஆண்டுகள் கழித்து,

யோசு 14: 10, 11ல் அவர், "இதோ, இன்று நான் எண்பத்தைந்து வயது உள்ளவன் என்னைமோசே அனுப்புகிற நாளில் எனக்கு இருந்த பெலன் இந்நாள் வரைக்கும் எனக்கு இருக்கிறது. "என்று கூறுகிறார்.

தேவனுடைய ஜனத்துக்கு அவரே பெலனாயிருக்கிறார்

பவுல் சுமது அனுபவத்தைப் பிலி 4· 13ல் கூறுகிறார். "என்னைப் பெலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையும் செய்ய எனக்குப் பலனுண்டு." இத் தேவ பெலன் தான் காலேபுடன் இருந்து செயல்பட்டது.

6 காலேபுடைய சிந்தனைகள் தேவனோடு கூட முன் செல்லுபவையாயிருந்தன

எண் 14: 1- 4ல் இஸ்ரவேலர் எகிப்திலேயே செத்திருந்தால் நலமாயிருக்குமே அங்கேயே திரும்பிப் போகிறதே உத்தமம் என்று புலம்பி, முறுமுறுத்தனர்.

எத்தனை நன்றி மறந்த தன்மை!

எத்தனை பெரிய வல்லமைகளை மறந்த நிலை!! இதே ஆட்கள் தான் எகிப்திலிருந்து விடுதலை பெற்று வந்தவுடன், "கர்த்தரைப் பாடுவேன், அவர் மகிமையாய் வெற்றி சிறந்தார்.

கர்த்தர் என் பெலனும், என் கீதமு மானவர். அவர் எனக்கு இரட்சிப்பு மானவர்.

கர்த்தரே யுத்தத்தில் வல்லவர், '' என்றெல்லாம் பாடினவர்கள். (யாத் 15- 1, 2, 3)

ஆனால் தேவனோடு நடந்து, சிந்தித்து, செயல்பட்ட காலேப் எண் 14- 6, 7ல் இஸ்ரவேலரைத் தேற்றுகிறதைக் காண்கிறோம். ''கானான் தேசம் மகா நல்ல தேசம் அந்தத் தேசத்தைத் தேவன் நமக்குக் கொடுப்பார்.''

பவுல் தமது அனுபத்தைக் கூறும் போது, " பின்னானவைகளை மறந்து, முன்னானவைகளை நாடி, கிறிஸ்து இயேசுவுக்குள் தேவன் அழைத்த பரம அழைப்பின் பந்தயப் பொருளுக்காக இலக்கை நோக்கித் தொடருகிறேன். " (பிலி 3- 13, 14) என்கிறார்.

7 மேலானவற்றைச் சிந்தித்து காலேப், தேவனுக்குப் பிரியமானதையே செய்ய விரும்பினார்

எண்14- 8ல் நாம் காண்கிறபடி "கர்த்தர் நம்மேல் பிரியமாயிருந்தால், அந்த தேசத்தை நமக்கு கொடுப்பார்'' என்று கூறுகிறார்.

பவுலும் கூட இப்படியே விரும்பினார். II கொரி 5-9ல் ''அவருக்குப் பிரிய மானவர்களாய் இருக்க நாடுகிறோம்'' என்று கூறுகிறார்.

உயர்ந்த அடைக்கலமாகத் தேவனைக் கொண்டிருக்கிற நாம் அவருக்குப் பிரிய மானவர்களாயிருப்பதையே நாடுவோமா!

இத்தனை அனுபவங்களைத் தேவன் பேரில் உள்ள விசுவாசத்தினால் பெற்ற காலேப் தேவனாலே சாட்சி பெற்றார்.

எண் 14- 24ல் தேவன் சொல்லுகிறார். 'என்னுடைய தாசனாகிய காலேப் வேறே ஆவியை உடையவனாயிருக்கிற படியினாலும், உத்தமமாய் என்னைப் பின் பற்றி வந்த படியினாலும்' அவன் போய் வந்த தேசத்திலே அவனைச் சேரப் பண்ணு வேன்.''

தேவாலயத்தின் உயர்ந்த கோபுரத்தின் நூறாவது ஆண்டு விழாவைக் கொண் டாடும் வேளையில்' உயர்ந்த அடைக்கலமான நமது தேவன், நம்மைக் குறித்து இவ் விதம் சாட்சி கொடுத்தால் எத்தனை பாக்கியம்!

தேவன் நமக்கும் அப்படியே செய்து, நம்மை ஆசீர்வதித்து, நம்மைக் காத்து உயர்த்துவாராக! ஆமென்.

**அருள்திரு. தவராஜ் டேவிட்.**

# மெய்ஞ்ஞானபுரம் சபை, நினைவில் நிற்பவை

ஆங்கிலேய மிஷனெரிமார் திருநெல்வேலி மாவட்டத்தில் பணிபுரிய ஆரம்பித்த காலத்தில் C. M. S. சங்கத்தார் சார்பில் கனம் ஜான் தாமஸ் அவர்கள் மெஞ்ஞானபுரத்தை மையமாகக் கொண்டு செயல்படத் துவங்கினார்கள். அஞ்ஞானத்தை அகற்றும் தமது நோக்கத்தின் பிரதி பலிப் பாகவே மெஞ்ஞானபுரம் எனப் பெயரிட்டனர். அவர்களது விசாரணைக் குட்பட்ட இடங்களைச் சந்திக்கத் தமது குதிரையில் செல்வது வழக்கம். குப்பாரத்தில் அன்னார் தங்கி ஓய்வு எடுக்கும் சிறு பங்களாவும் குதிரை லாயமும் இன்றும் நினைவு கூறப்படுகின்றன. பாட்டக்கரை கிராம மக்கள் காலரா என்ற நோயினால் பெருவாரியாக மாண்ட காலத்தில் கனம் ஐயரவர்கள் அங்கு நேரடியாகச் சென்று தேவையான உதவிகளைச் செய்துள்ளார்கள்.

இன்று அங்கு அமைக்கப்பட்டுள்ள தேவாலயத்தின் நூற்றாண்டு விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப் படுகின்றது ஆலயம் கட்டத் துவங்கிய காலத்தில் அங்கு மிகச் சிறியதோர் சபையே இருந்ததாம்மிகப்பிரமாண்டமான ஆலபத்துக்கு அஸ்திவார மிடப் பட்டபோது அதைக் கண்டு வியந்த சிலர் ''இந்தச் சிறிய சபைக்கு ஏன் இந்தப் பெரிய ஆலயம்?என வின வினராம்

கனம் ஐயரவர்கள் ''பாருங்கள் மிக விரைவில் இந்த ஆலயம் நிரம்பி விடும் ''என்றார்களாம்.

ஐயரவர்களின் கனவு நனவாகியது மெஞ்ஞானபுரம் மகப் பெரிய சபையாக உருவாகி விட்டது.

திருச்சபையின் உயிர்நாடி வேத அறிவே என்பதை உணர்ந்த கனம் ஐயரவர்கள் வேத வசனங்களைக் கற்றுக்கொள்ள மக்களை ஊக்கப் படுத்தினார்கள். அப் 17:11ல் பெரோயா பட்டணத்தார் தினந்தோறும் வேதவாக்கியங்களை ஆராய்ந்து பார்த்ததினால் நற்குண சாலிகளாயிருந்தார்கள் என வாசிக்கிறோம், மெஞ்ஞானபுரத்தைப் பொறுத்த மட்டில் ''வேதாகமே நூல்கள் எல்லாம் அழிக்கப் பட்டாலும் அதில் உள்ள வசனங்களையெல்லாம் மனப் பாடமாக எழுதித் தரக் கூடிய பலர் அங்கு இருந்தார்கள் ''என்ற நற் சாட்சி உண்டு, இன்றும் சிறு பிள்ளைகளிடத்தில் இந்த ஞானம் அடங்கிக் கிடப்பதைக் காணக் கூடும்,

முயற்சியுள்ள இடத்தில் இறைவனது கிருபையும் சுரந்து வருகிறது கடவுளதுவழிநடத்துதல்நித்தியகாலமாகஇயங்குகிறது இக் குருகிய கால அளவில் இங்குள்ள உயர் நிலைப் பள்ளியில் கல்விபயின்ற நால்வர் மகாகனம் சாமுவேல் வேதநாயகம் அசரியா மகா கனம் S. சாமுவேல் தானியேல் ஆபிரகாம் மகா கனம் ஜாண் சவரிமுத்து தற்போதைய நெல்லைப் பேராயர் மகா கனம் ஜேசன் S. தர்மராஜ் ஆகியோர் பேராயர்களாகவும் மற்றும் அநேகர் குருமாராகவும் உருவாக்கப் பட்டு சிறப்பான பணியாற்றி வருவதைக் காணும் போது மெஞ்ஞானபுரமே நீ வாழ்க! உன்னை நேசிப்பவர்கள் சுகித்திருப்பார்களாக! என்று வாழ்த்த விரும்புகிறேன்.

Rev. R. பிச்சமுத்து, B.A., B.D.
செயலர், திருமண்டல பாலியர் சங்கம்

# வாழ்த்துரை

Rev. and dear Brother,

தேதி: 2—1—'85

மெய்ஞ்ஞானபுரம் சபையின் ஆலய கோபுர நூற்றாண்டு வைபவம் சிறப்பாக நடைபெற திரியேகக் கடவுளின் ஆசியைக் கூறிக் கொள்ளுகிறேன். அதின் சார்பில் வெளியிடும் விழா மலர் இனிதே எவ்விடத்திலும் மணம் வீச ஆண்டவர் அருள் புரிவாராக.

மெய்ஞ்ஞானபுரம் சபை நம் திருமண்டல மிகப்பெரிய சபைகளில் ஒன்று. அச்சபை குருவாக 3 ஆண்டு காலம் (1973—1976) பணிபுரிய வல்ல இறைவன் கிருபை செய்தார். அவிக்குரிய பிரகாரம் வளம்பெற சபையில் சகல ஏற்பாடுகளும் செவ்வனே நடைபெற்று வருவதை நினைவில் கொண்டு ஆண்டவருக்கு நன்றி செலுத்துகிறேன். காலை, மாலை ஆராதனை கிரமமாக நடைபெறும். ஞாயிறு மதியம் 12 மணிக்கு ஆராதனை அந்நாட்களில் என் உள்ளத்தில் பல எண்ணங்களைக்கொண்டு வந்தது உண்டு ஞாயிறுதோறும் மாலையில் உற்சாகமாக நடைபெறும் ஜெபக்கூட்டம் நான் மட்டுமல்ல, அச்சபையில் பணிபுரியும் எவரும் மறக்க முடியாத ஒன்றாகும். ஜெபக்கூட்டத்தில் அருட்செய்திக்குப்பின் படைக்கப்படும் பொருட்கள் ஏலவிற்பனை ஏற்றத்தை எடுத்துரைக்க இயலாது, ஏன்? அதின்விளைவாக பல ஆண்டுகளாக சேமிக்கப்பட்டத்தொகை இந்நாளில் நாம் காணும் வகையில் நம் ஆலயம் புதுப்பிக்கப் பட்டு அழகு பெற்று விளங்க பெரிதும் உதவியது அன்றோ!

சபையின் மக்களில் பலர் வறுமை கோட்டிற்கு கீழாக வருமானம் பெற்று வருபவரேயாயினும் சபைப்பணி, ஆலயப்பணி, நற்செய்திப் பணி இவற்றில் மிக்க ஆர்வமுடையவர் எனின் மிகையாகாது. எனினும் மக்களின் பொருளாதாரம் மேம்பாடடைய இனியநோர் திட்டம் வகுக்க என் மனத்தில் அந்நாட்களில் ஆவல் எழும்பிற்று. மெய்ஞ்ஞானபுரம் சபைக்குப் புதிய திட்டம் என்பது அல்ல: பழைய திட்டமே புது மெருகுடன் செயல்பட சபையின் மக்கள் ஊக்கம் பெற்றனர். ஆதி மிஷனெரிமார் நாள்முதற்கொண்டு மெய்ஞ்ஞானபுரத்தில் செயல்பட்டுவந்த சிறு கைத்தொழில் பனை ஓலைப்பொருட்கள் செய்தல் — அது நம்நாட்டில் மட்டும் அல்ல இதர நாடுகளிலும் மெய்ஞ்ஞானபுரம் ஓலைப்பெட்டி, அடுக்குப்பெட்டி, தையல்பெட்டி இன்றும் புகழ்ச்சிக்குரியதே, நான் சபைகுருவாக பொறுப்பேற்ற ஆரம்ப நாட்களில் பாக்கியம் அம்மாள் என்ற வயது சென்ற அம்மாள் அலைந்துதிரிந்து வீடுகளில் செய்யப் பட்டுள்ள ஓலைப்பெட்டிகளை சிரமப்பட்டு வாங்கி வந்து நாசரேத் ரெயில் வண்டி மூலம் ஏற்றிவரும் காட்சி இன்றும் என் கண்முன் உண்டு.

'பனை ஓலை பொருட்கள் செய்தல்' குடிசைத் தொழிலாக மெய்ஞ்ஞானபுரத் தில் இடம்பெற திட்டம் வகுக்கப்பட்டது அதற்கென ஒரு சிறு குழு அமையப்பெற்று, அத்தொழில் திறம்படச்செய்ய மக்களை ஊக்குவிப்பது எப்படி என பல நாட்கள் சிந்தித்து செயல்பட்டனர். தக்க சமயத்தில் அரசாங்கத்தை அணுகியபோது, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அனைவரும் ஆர்வம் காண்பித்தனர். பனைஓலைப் பொருட் கள் செய்வதில் பயிற்சிப்பெற்ற ஒரு குடும்பம்—கணவனும் மனைவியும்—அரசாங்க ஊதியம் பெற்று, ஊரில் தங்கி, பெண்களுக்குக் கற்றுக் கொடுத்தனர் ஆரம்ப நாட் களில் ஆர்வத்துடன் மக்கள் அதனை ஏற்றுக்கொண்டனர் என சொல்லமுடியாது. காலக்கிரமத்தில் சந்தேகங்கள் களையப் பெற்றன. மக்கள் ஊக்கம் கொண்டு, உற்சாகமாக பனை ஓலைப் பொருட்களைச் செய்யக் கற்றுக் கொண்டனர். குடும்பத்தில் நல்ல வருவாய்க்கு வழிவகுக்கப்பட்டது. பல குடும்பங்கள் பயன் பெற்றுள்ளன எனத் தைரியமுடன் சொல்லலாம். ஆம் "கைத்தொழில் ஒன்று கற்றுக் கொண்டால், கவலை உனக்கில்லை"

அண்மையில் உள்ள மணப்பாடு பனை ஓலை பொருட்கள் நிலையம் போல அந்நிய செலவாணி பல ஆயிரம் பெற்றிட இச்சிறு கைத்தொழில் எல்லாக்குடும்பங் ளிலும் இடம் பெற வேண்டும் என ஆசிக் கூறுகிறேன். பகலில் என்ன வேலையில் ஈடுபட்டிருந்தாலும் ஓய்வு நேரத்தில் குடும்பத்தில் எல்லா அங்கத்தினரும் தகப்பன், தாய், மக்கள் அனைவரும் — இச்சிறு குடிசைத் தொழிலில் பங்குபெற வாய்ப்பளிப்பது பனை ஓலை பொருட்கள் செய்தலாகும். இச்சிறு கைத்தொழில் உங்கள் மத்தியில் விருத்தியடைய, குடும்ப வருவாய் பெருகிட, மக்களின் வறுமை விரட்டப்பட எல்லாம் வல்ல இறைவன் அருட்புரிவாராக. கடவுள் உங்களனைவரையும் ஆசீர்வதிப்பாராக

உங்களுக்காக ஜெபிக்கும்: A. திரவியர் ஏசுதாசன்,

# ஆலய கோபுர பழுது நீக்கம்

(ஒரு வரலாறு)

கர்த்தரின் பெரிதான தயவாலும், இரக்கத்தாலும், கனம். ஜாண் தாமஸ் ஐயரவர்களால் கட்டப்பட்ட பரி. பவுலின் ஆலயம் உச்சி முதல் உள்ளங்கால் வரை பழுது பார்க்கும் சிறப்பான பணி 100 ஆண்டுகளுக்குப் பின் இந்த தலை முறையினருக்கு கிடைக்கப் பெற்றது குறித்து மகிழ்ச்சி. இத் தலை முறையினர்க்கு இந்த சிறந்த வாய்ப்பை நல்கிய ஏசுபிரானுக்கு கோடான கோடி ஸ்தோத்திரம் உண்டாகட்டும்.

நமது மகத்துவமான ஆலயத்தின் தெற்குப்பகுதி(SOUTHWING) 1946- 47ம் ஆண்டு பழுது பார்த்து முடிக்கப்பட்டது. ஆனால் வடக்கு பத்தி (northwing) கிட்டத்தட்ட 37 ஆண்டு காலமாக பழுது நீக்காமலே இருந்து வருகிறது. அப்பணியைச் செய்வதற்காக ரிப்பேர் கமிட்டி தீவிரமாக பணத்தை தயார் செய்து கொண்டிருந்தார்கள். நமது மக்களும் தங்களது தாராளமான காணிக்கைகளைக் கொடுத்து வந்தார்கள். இதற்கிடையில் அருட்திரு. M. D. ராஜமணி ஐயரவர்கள் காலத்தில் ஆலயத்தின் மேல் கூரை பழுது நீக்கப்பட்டது. மறைந்த திரு சிங்கர் சாமுவேல் அவர்கள் மேற்பார்வையில் நடைபெற்ற மகத்துவ பணிக்கு பொது மக்களும் தீவிரமான ஒத்துழைப்பை நல்கினார்கள் அந்த பிரமாண்டமான பணியும் மின் சார விளக்குகள் பொருத்தும் பணியும் நல்ல முறையில் நடந்தேறியது.

ஆக வடக்கு பத்தி (Northwing) ரிப்பேர் செய்வதற்கு தொடர்ந்து பணம் சேகரிக்கப்பட்டு வந்தது. அதற்காக ஊர் மகமைப் பொதுக்கூட்டம் நடத்தப்பட்டது. தெற்குப் பக்கத்தில் செய்திருப்பது போல வடக்குப் புரமும் உத்திரங்கள் அமைத்து கட்டை போட்டு- (Madras- terrace) அமைக்க வேண்டும் என்று பொதுவாக பேசப்பட்டது அதோடு கான்கிரீட் போட்டு விட்டால் வேலைக் கூலியும். பணச் செலவும்- மீதமாகும். அதிக நாட்களும் உழைக்கும் என்றும் சிலர் அபிப்பிராயம் கூறினார்கள்- ஆனால், எந்த முடிவும் எடுக்கப்படாத நிலையில் இருந்தது.

## கோபுர ரிப்பேர்

இதற்கிடையில் தற்போது நம்மிடையே பணிபுரிந்து வரும் சேகர குரு அருட்திரு. அறிவர் B. தர்மராஜன் அவர்கள் தலைமைக் குருவாகப் பொறுப்பேற்றார்கள். நமது ஆலயத்திற்குத் தற் செயலாக வந்த ஒரு வட்டார அதிகாரி (தாசில்தார்) நமது ஆலயத்தின் சிறப்பையும் மகிமையையும் கண்டு வியந்தார். அச்சமயத்தில் சேகர குருவானவரைப் பார்த்து ''இத்தனை மகத்துவமான ஆலயத்தை எந்த புண்ணியவானோ கட்டி வைத்திருக்கிறார். ஆனால் நீங்கள் இதனை பழுது நீக்கும் காரியத்தில் மிகவும் அக்கரையில்லாமல் இருக்கிறீர்களே! அதோ கோபுரத்தின் மேல் பாருங்கள்: பூச்சுமானங்கள் எல்லாம் நாளாவட்டத்தில் காற்றிலும், மழையிலும் கரைந்து வெறும் செங்கல் மட்டும் தெரிகிறதே! கோபுரத்திற்கு பெரிய பழுது ஏற்பட்டால் அதைப் பழையதைப் போல மீண்டும் நீங்கள் அமைக்க முடியுமா? ''என்று கேட்டார். இதே கேள்வியை அப்போது உடன்குடி ஒன்றியத்தில் இஞ்சினியராகப் பணி புரிந்த பெரியவரும் கேட்டார். ஆகவே கனம் ஐயரவர்களும், ரிப்பேர் கமிட்டியினரும் அவசரமாகக் கூடி, முதலில் ஆலயக் கோபுரத்தை மேலிருந்து பழுது நீக்கிக் கொத்திப் பூசுவது என்று முடிவெடுத்து, அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

## சிமெண்டுப் பூச்சா? காரைப் பூச்சா?

கொத்திப் பூசுவது சிமெண்டைக் கொண்டா அல்லது சுண்ணாம்புக் காரையை கொண்டு பூசுவதா? எந்த வர்ணம் பூசுவது? என்று பல விதமாக ஆராயப்பட்டது ஊர்ப்பொது மக்கள் அனைவர் மனதிலும், பழைய நிறத்தில் எந்த விதமான மாற்றமும் இருக்கக் கூடாது என்பதில் ஏகோபித்தக் கருத்து இருந்தது. மாலை மஞ்சள் வெயிலில் நமது ஆலயம் ஒரு ஒளியோடு பிரகாசிக்குமே! அதைக் கெடுத்துவிடாதீர்கள் என்றார்கள் அநேகர். சிமெண்டினால் பூசினால் ஒழுங்காக தண்ணீர் விடமுடியாது மேலே வர்ணம் பூசும் போது சில ஆண்டுகளுக்குள் அது உரிந்து விடும்- அல்லது பாசி பிடித்துக் கருத்து விடும் என்ற கருத்து அநேகரால் கூறப்பட்டது.

ஆகவே சிமெண்டு பூசும் எண்ணம் கைவிடப்பட்டது. சுண்ணாம்பையும் பருமணலையும் சேர்த்து அறைத்துப் பூசுவது என்று முடிவு செய்யப்பட்டது. அனால் கொத்தனார்கள் அறைத்துப் பூசும் போது பாலீஷாக இருக்கும்; பாசி பிடிக்க ஏதுவாக இருக்கும்; அதோடு பெரிய உருளையில் போட்டு சாந்தை அறைத்து 'ஸ்டாக்' வைக்க முடியாது; அறைத்த சாந்தை அவ்வப்போது காலி செய்ய வேண்டும்; கருப்புகட்டியும் கடுக்காய்ச் சாறும் சேர்த்தபின் சாந்து விரைவில் கெட்டுவிடும் என்ற கருத்து கூறப்பட்டது. ஆகவே சாந்தை உலக்கையால் குத்திப்பூசுவது என்று முடிவு செய்யப்பட்டது.

### இயற்கை நிறம்

எந்த விகிதாச்சாரத்தில் சுண்ணாம்பையும் மண்-பருமணல் ஆகியவற்றையும் கலப்பது? என்று பிரச்சனை எழுந்தது கோபுரத்தின் பழைய நிறமாகிய பழைய மலையாள ஓட்டு நிறம் கிடைக்கவேண்டும். ஆலயத்தின் பின்புறம் உள்ள கோட்டைச் சுவர்களில் ஏராளமான மாதிரிப் பூச்சுகள் பூசிப் பார்க்கப்பட்டன. நூற்றுக்கணக்கான மாதிரிகள் பூசிப்பார்த்தும் எந்த மாதிரிப் பூச்சும் மனதிற்கு பிடிக்கவில்லை. பழைய நிறத்திலிருந்து மாறுபட்டதாகவே அனைவர் கண்களுக்கும் தெரிந்தது.

மின்னல் போன்ற ஒரு எண்ணம் ஒருநாள் நடைபெற்ற ரிப்பேர் கமிட்டிக் கூட்டத்தில் நமது ஜாண் தாமஸ் ஐயரவர்கள் பன்னம்பாறையிலிருந்துதான் கல்கொண்டு வந்தார். அந்தக் கல்லட்டாங் குழியில் ஒரு வகைக் காவி மண் இருப்பதாகக் கூறுகிறார்கள். அந்தக் காவி மண் ஒரு பங்கும் சுண்ணாம்பு ஒரு பங்கும் பருமணல் ஒரு பங்கும் கலந்து ஒரு மாதிரி பூசிப்பார்ப்போம் என்ற கருத்தைக் கூறினோம். உடனே கொத்தனார் தா. ஈசாக்கு அவர்களுக்கு மாதிரி நிறம் பூசும் பணி தரப்பட்டது. மறு நாளே அந்த மாதிரியை பூசிப் பார்த்தபோது- பழைய நிறம் அப்படியே கிடைத்தது. ஆகவே உடனடியாக சாந்து குழைக்கப்பட்டுக் குழிகளில் போட்டுக் கருப்பு கட்டியும். கடுக்காய் சாறும் கலந்து உலக்கையால் குத்தி கோபுரத்தின் பூச்சுமானம் நடைபெற்றது. பூச்சுமானம் முடிந்த பின், அதே கலவைச் சாந்தினை அம்மியில் வைத்து கருப்பட்டி. கடுக்காய் சாறு சேர்த்து அறைத்துக் கலக்கி, அந்த இயற்கை வர்ணமே மேலேயும் பூசப்பட்டது. மேலே பூசப்பட்ட வர்ணமும் உள்ளே பூச்சுமானமும் ஒரே நிறத்தில் அமைந்தது விந்தையே! நமது ஆலயத்தின் பழைய நிறம் மாறாமல் அதே நிறம் மீண்டும் கிடைக்கச் செய்த கர்த்தருக்கு நன்றி சொல்வோமாக!

## இன்னும் பணிகள் தொடரட்டும்

இன்னும் நம் முன் ஏராளமான பணிகள் உள்ளன. 1949ம் ஆண்டில் தெற்கு பத்தி (South Wing) ரிப்பேர் பார்த்து விட்டோம். ஆனால் வடக்கு பத்தி (NorthWing இன்னும் ரிப்பேர் செய்யப்படவில்லை. வரும் ஆண்டுகளில் அப்பணி செய்யப்பட வேண்டும். ஆலயத்தின் உள்ளே மின் அமைப்புகள் சரியான நிலையில் இல்லை எந்த ஒரு பழுது நீக்கத்திற்கும் கூரை உள்ளே (Ceiling) சென்று பார்க்க வேண்டி யுள்ளது. மின்சார விளக்குகளும் எந்தவித ஒழுங்கும் இன்றி போட்டது போல உள் ளது. இவை அனைத்தையும் மாற்றி அமைக்க வேண்டும்! ஆலயத்திற்கு ஒரு ஜெனரேட்டர் அவசியமாகத் தேவை மின் விளக்குகள் தேவைக்கு அதிகமாக உள்ளன. ஆகவே ஜெனரேட்டர் வகைக்கு கொடுப்பதும் ஆலயத் தீபத்திற்காகக் கொடுக்கும் ஒரு காணிக்கையாகவேத்தான் கருதப்படும்! ஆகவே ஜெனரேட்டர் வாங்கும் வகைக்குத் தாராளமாக உதவுவோமாக எல்லாம் வல்ல ஏசுபிரான் நம் அனைவருக்கும் ஜீவன் பெலன் சுகம் கொடுத்து ஆலயத்தைப் பழுது நீக்கத் தந்த வாய்ப்பிற்கும் - நூற்றாண்டு விழாவைக் கண்டு கொண்டாடக் கிருபை செய்தமைக் கும் கோடாகோடி ஸ்தோத்திரம் செலுத்துவோமாக!

எஸ். டேவிட் தனசிங் M.A.,B.Ed









பரி. பவுலின் ஆலயம், மெய்ஞ்ஞானபுரம்.

# "பரிசுத்த பவுலின் ஆலயம்"

(சில புள்ளி விவரங்கள்)

தென் இந்தியாவிலேயே சிறப்புமிக்கப் பரி. பவுலின் ஆலயக்கோபுர பழுது நீக்கும் பணி கர்த்தரின் பெரிதான தயவாலும், புனிதவான் ஜாண் தாமஸ் அவர்களின் ஆசியாலும் 1984-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் கோபுர உச்சி மட்டும் சாரங்கள் அமைத்து வேலை ஆரம்பமானது.

## மகுடக் கல்லின் மகிமை :

சாரங்கள் நல்ல முறையில் அமைக்கப்பட்டிருந்ததால் வெளிபக்கமாக ஏறி மகுடக் கல்லை தொட்டுப் பார்க்கும் பேறு அநேகருக்கு கிடைத்தது. அக்கல்லின் அமைப்பையும், அது பொருத்தப்பட்டிருக்கும் விதத்தையும் பார்க்கும்போது பரிசுத்தவான் ஜாண் தாமஸ் ஐயரவர்களிடம்



ஆண்டவரின் பிரசன்னம் எவ்வளவாக இருந்து வழி நடத்தி வந்திருக்கிறது என்பதை நாம் உணர முடிகிறது. மகுடக் கல்லின் புகைப்படமும், ஏழாவது மாடியின் மேல்பகுதி வரைபடமும் இங்கே வெளியிடப்பட்டிருக்கிறது. எத்தனை ஞானமாக ஒவ்வொரு அமைப்பும் திட்டமிடப்பட்டுச் செய்யப்பட்டிருக்கிறது என்று நினைக்கும்போது உள்ளம் இறும்பூதடைகிறது.

## எட்டுப் பட்டை :

நான்கு மாடிகள் மட்டும் கற்களை ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கிச் சதுர வடிவில் அமைக்கப்பட்ட நமது கோபுரம்—பின்னர் மேற்பகுதி எட்டுத் திசைகளையும் கருத்தில் கொண்டு, எட்டு பட்டை வடிவமாக கூம்புபோல் மேல் உயர்ந்து செல்கிறது. எல்லாவற்றிலும் எட்டுப் பட்டை வைரத்திற்குப் பட்டைத் தீட்டியதுபோல அமைந்துள்ளது. நான்காம் மாடிக்குமேல் செங்கற்களும் சுண்ணாம்பும் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கிறது என்று நினைத்த எனக்கு, மேலே சென்றுப் பார்த்த பின் அங்கு கற்கள் எவ்வளவு ஞானமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்ற விவரம் தெரிய வந்தது. நீங்கள் வரைபடத்தில் காண்பதுபோல் ஏழாவது மாடியில் மகுடக் கல்லுக்குக் கீழே ஏழு கற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் கீழிருந்து மேலாக மூன்று கற்கள் மத்தியில் குடையப்பட்டு, இரண்டு கற்கள் சேர்த்து எட்டுப் பட்டைகள் தீட்டி பொருத்தப்பட்ட (JOINT) கற்கள் ஆகும். முதல் கல்லின் சுற்றளவு 160 அங்குலம் ஆகும். இந்த மூன்று இணைப்பு (JOINT) கற்களுக்கு மேலே மத்தியில் குடையப்பட்டு எட்டுப் பட்டைகள் தீட்டப்பட்ட மூன்று முழு கற்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கல்லின் உயரம் எட்டு அங்குலம் ஆகும். ஏழாவது கல் இரண்டாகப் பொருத்தப்பட்ட கல் ஆகும். எட்டாவது கல் மகுடக் கல்லின் முகப்புக்கல் ஆகும். இது ஒரே கல்லினால் மிகச்சிறப்புடன் பட்டைகள் தீட்டப்பட்டக் கல் ஆகும். இக்கல்லின் அடிப்பாகம் 8 பட்டைகளின் சுற்றளவு 60 அங்குலம். மேல்பகுதி மகுடக் கல்லின் உள்ளே சொருகப்பட்டிருக்கிறது. அதன் சுற்றளவு பட்டைக்கு 5 அங்குலம் வீதம் 40 அங்குலம் ஆகும். மகுடக் கல்லின் சுற்றளவு ஒரு பட்டைக்கு 10 அங்குலம் வீதம் 80 அங்குலம் ஆகும். மகுடக் கல்லின் மத்தியில் துளை அடிக்கப்பட்டுக் கீழே உள்ளக் கல்லும் மகுடக் கல்லுக்கு மேலே உள்ள கல்லும் உள்ளே பொருத்தப்பட்டுள்ளது. மகுடக் கல்லுக்கு மேலே உள்ளக் கல் மேல் பகுதியின் சுற்றளவுப் பட்டைக்கு 5 அங்குலம் வீதம் 40 அங்குலமாகவும், மகுடக் கல்லின் உள்ளே நுளைகின்ற பகுதியில் 36 அங்குலமாகவும் அமைந்துள்ளது. மகுடக் கல்லின் மத்தியில் துளை அடிக்கப்பட்டு, மகுடக்கல்லின் முகப்புக் கல்லும் மேல் கல்லும் உள்ளே பொருத்தப்பட்ட விதத்தை எண்ணிப்பார்க்கும் போது, உடம்பெல்லாம் புல்லரிக்கிறது! எத்தனை புத்திக் கூர்மையுடன் ஒவ்வொரு செயலும் நடந்துள்ளது என்று எண்ணி வியப்படைகிறேன்.




## காந்தக் கம்பி :

இடியைத் தாங்கக் கூடிய காந்தக்கம்பி நம் ஊர் மக்களால் ஊசிக்காந்தம் என்று அழைக்கப்பட்டு வருகிறது. இந்த காந்தக கம்பி மகுடக் கல்லின் மேல்கல் மகுடக்கல்லுக்குள் சொருகப்பட்டிருக்கும் இடத்தில் தென்புறமாக கற்களுக்கும் காந்தக் கம்பிக்கும் இணைப்பு இல்லாத வகையில், பீங்கான் குண்டுகள் அமைத்து இரும்புப் பட்டைகளின் உதவியுடன் அமைக்கப்பட்டிருக்கிறது. நாலறை அடி உயரத்தில் அந்தக் காந்தக்கம்பி அமைக்கப்பட்டிருக்கிறது. நுனியில் நான்கு திசைகளை நோக்கி நான்கு கம்பிகளும் 5-ஆவது கம்பி ஆகாயத்தை நோக்கியும் நிற்கின்றன. முதலில் அமைக்கப்பட்ட காந்தக்கம்பி பழுதடைந்து விட்டதால் இது இரண்டாவது அமைக்கப்பட்ட காந்தக்கம்பி என்று கூறப்படுகிறது.

## மரக் கப்பி ;

ஏழாவது மாடியில் தென்புற வாசலுக்கு மேலே சிறிய தூரத்தில் சுவரின் வெளிப்பக்கமாகச் சுவரைத் துளைத்து ஒரு மரத்திலான கப்பி அமைக்கப்பட்டுள்ளது. அது அதிகமாக உபயோகிக்கப்பட்டு தேய்ந்துபோன நிலையில் உள்ளது. கீழே

இருந்து மேலே பொருட்களைக் கொண்டு செல்லத்தக்க உறுதி வாய்ந்த கப்பியாக அது தெரிய வில்லை. அந்தக் கப்பி எதற்காக அமைக்கப்பட்டிருக்கலாம் என்று பல பெரியவர்களை அணுகி கேட்டேன். சிலருடைய அபிப்பிராயம், முன்பு கோயில் விழாக்களுக்கு கோபுரத்தின் உச்சியில் கொடி ஏற்றுவது வழக்கம்; ஒருவேளை ஏழாவது மாடி வாசலில் நின்று கொடியை ஏற்றி இறக்க இந்த கப்பி பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்பதே! எனக்கும் அது ஓரளவு பொருத்தமாக தெரிந்தது. இதனால் ஆலயத்தில் கொடியேற்ற வேண்டியது எவ்வளவு முக்கியம் என உணர்வோம்!

## ஆலய உட்புற அளவு :

நமது ஆலயத்தின் உட்புறம் ஆல்டர் நீங்கலாக நீளம் 91 அடி அகலம் $58\frac{1}{2}$ அடி. வட புற, தென்புற அங்கி அறைகளின் நீளம் 15 அடி. அகலம் 15 அடி. முன் மண்டபத்தின் நீளம் 14 அடி. அகலம் 14 அடி. ஆல்டரின் நீளம் மகாபரிசுத்த ஸ்தலம் நீளம் 10' 2''. அகலம் 20 அடி பரிசுத்த ஸ்தலம் $13\frac{1}{2}$ அடி நீளம். அகலம் 20 அடி. மேற்கூரையின் உயரம் கிட்டத்தட்ட 60 அடி உயரம் ஆகும்.

நமது ஆலயத்தின் உட்புறத்தில் மிகச்சிறப்பான அமைப்பைப் பெற்றிருப்பது எட்டுத் தூண்களை ஒன்றாக் இணைத்து, அதன்மீது அமைக்கப்பட்டிருக்கும் அழகு வாய்ந்த வளைவுகள் (arch) ஆகும். இவ்வளவு சிறப்பான அமைப்புகளை வேறெங்கும் நாம் காணமுடியாது. தூண்கள் ஒவ்வொன்றும் தனித்தனியாகச் செதுக்கப்பட்டு கீழே உள்ள பெரிய எட்டு வளைவுக் கல்லில் முளைகள் அடிக்கப்பட்டு, அதில் சொருகப்பட்டவை என்று பெரியவர்கள் மூலம் கேள்விப் பட்டேன். 8 கற்தூண்களும் இரும்புப்பட்டைகள் மூலம் வெளியே தெரியாதவாறு பொருத்தப் பட்டுள்ளன. புகழ்மிக்க வளைவுகளைத் (arch) தாங்கி நிற்கக்கூடிய அந்தக் கல் தூண்களை நாம் மிக கவனத்தோடு பாதுகாப்பது நமது கடமை ஆகும்! தூண்களில் மின் விளக்குகள், மின் விசிறிகள் பொருத்தும்போது தீர ஆராய்ந்து செயல்பட வேண்டும்.

இந்திய சிற்பக்கலையும், கிரேக்க சிற்பக்கலையும் சேர்ந்து உருவாக்கப்பட்ட காந்தாரச் சிற்பக்கலை போன்று, ஆங்கிலக் கட்டடக் கலையும், இந்தியக் கட்டடக் கலையும் இணைந்து உரு வாக்கப்பட்டப் பரிசுத்தப் பவுலின் ஆலயத்தின் ஒவ்வொரு அமைப்புகளையும் கண்களை இமைகள் காத்து வருவதுபோல காத்து வர வேண்டியது நம் ஒவ்வொருவர்மீதும் விழுந்த தலையாய கடமையாகும்!

**தா. சீமோன்,**
டயோசிஷன் சவுன்சில் மெம்பர்.





பரி. பவுலின் ஆலய ஆல்ட்டரின் தோற்றம்.

# புலிக்குத்திப் "போத்தி"

பரிசுத்தவான் **ஜாண் தாமஸ்** ஐயரவர்கள் வேகமாகத் தனது வெள்ளைக் குதிரையைச் செலுத்தி வந்துகொண்டிருந்தார். திடீரென்று ஒரு முரட்டு உருவம் குதிரையை வழிமறித்து அதன் கடிவாளத்தைப் பிடித்து குதிரையை மடக்கிப் பிடித்தது. திகைத்து நின்ற ஜாண் தாமஸ் அந்த உருவத்தை உற்றுப் பார்த்து அதட்டினார். உனக்கு என்ன வேண்டும் ? என்றார். அந்த முரட்டு உருவத்திற்கு சொந்தக்காரர் பதில் பேசவில்லை. மாறாக அவரின் கண்களில் கண்ணீர் தாரைதாரையாக வழிந்தது.

அவரைத் தேற்றுவதற்காக குதிரையில் இருந்து கீழே இரங்கினார் ஜாண் தாமஸ். ஜாண் தாமஸைத் தடுத்து நிறுத்தியது செம்மறிக்குளத்தைச் சேர்ந்த **போத்தி நாடார்**தான். கொள்ளை நோயால் தன் குடும்பம் முழுவதும் அழிந்துவிட்ட சோகக் கதையை ஜாண் தாமஸிடம் சொல்லி முடித்தார் போத்தி நாடார். ஜாண் தாமஸ் தனது அரவணைப்பால் போத்தி நாடாரை ஆறுதல் படுத்தினார்.

ஜாண் தாமஸின் அன்பு தோன்றும் முகமும் கருணைமிக்கப் பேச்சும் போத்தி நாடாரை மிகவும் கவர்ந்தது. நான் உடனே ஞானஸ்நானம் பெற வேண்டும் என்று போத்தி நாடார் கேட்டார். சில நாட்கள் அதற்கான போதனை கொடுக்கப்பட்டபின் போத்தி நாடார் கிறிஸ்தவரானார். செ. **ஞானமுத்து நாடார்** என்ற பெயர் சூட்டப்பட்டது. அதோடு ஜாண் தாமஸின் இணைபிரியாத நண்பரானார். ஜாண் தாமஸ் ஐயரவர்கள் எங்கு சென்றாலும் துணையாகச் செல்வார், ஜாண் தாமஸ் ஐயரவர்கள் இடும் கட்டளைகளை உடனடியாக நிறைவேற்றுவார். ஆலயம் கட்டுவதற்குக் கற்களை வண்டியில் கொண்டு சேர்ப்பதில் தீவிரமாக ஈடுபட்டார்.

## குற்றாலத்தில் ஜாண் தாமஸ்

ஒரு சமயம் குற்றாலத்திற்கு சீசனுக்காக கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் சென்றிருந்தார்கள் உடன் போத்தி நாடாரும் சென்றிருந்தார். போக்குவரத்து வசதி இல்லாத அந்தக் காலத்தில் காட்டின் ஊடே நடந்து செல்ல வேண்டிய ஒரு நிலை. ஐயரவர்கள் குழு சென்றுகொண்டிருக்கும்போது. திடீரென்று ஒரு புலி முன்னால் பாய்ந்தது கண் இமைக்கும் நேரத்திற்குள் அந்தப் புலியை மடக்கிப் பிடித்து வேல் கத்தியால் குத்திக்கொன்றார் போத்தி நாடார்.

அன்றிலிருந்து ஜாண் தாமஸ் ஐயரவர்களும் போத்தி நாடாரும் இன்னும் நெருங்கிப் பழக ஆரம்பித்தனர். ஜாண் தாமஸ் ஐயரவர்கள் போத்தி நாடாருக்கு **''புலிக்குத்திப் போத்தி''** என்ற பட்டப் பெயரைச் சூட்டினார்கள்.

புலிக்குத்திப் போத்தி நாடாரின் கல்லறை நம் ஊர் கல்லறைத் தோட்டத்தின் கீழ்ப்புற வேலி ஓரத்தில் தென்புறத்தில் உள்ளது. செ. புலி ஞானமுத்து நாடார் என்று கல்லறையில் குறிப்பிடப் பட்டுள்ளது.

போத்தி நாடாரின் வழித் தோன்றல்கள் இன்றும் மெய்ஞ்ஞானபுரத்தில் வாழ்கின்றார்கள்.

**பொ. யோவான்**



மெய்ஞ்ஞானபுரம் சபையே

# மகிழ்ச்சியோடு கர்த்தருக்கு ஆராதனைச் செய்ய வாருங்கள்!



வானத்தை அளாவும் உயரமான சிகரமுள்ள கெம்பீரமான ஆலயத்தின் கோபுரம், நம் அனைவரையும் தூரத்தில் இருந்தே கண் சிமிட்டி அழைப்பதுபோல் இருக்கிறது. இசைத்தட்டுகளின் இனிய கானங்கள் நம்மை மெய்மறக்கச் செய்கின்றன. 'கணீர்' என்று ஒலிக்கும் ஆலய மணி நம்மை ஆலயத்திற்கு அடி எடுத்து வைக்கத் தூண்டுகிறது. பாடகர்களின் கீத ஒலி நம்மை ஆராதனையில் ஒன்றித்து செயல்பட துணைபுரிகிறது. ஆலய மின் விளக்குகள், மின் விசிறிகள் தேவையான ஒளியையும், தூய காற்றையும் தாராளமாக வாரி வழங்குகிறது. போதுமான நாற்காலிகள், பெஞ்சுகள் சபையார் அமர்ந்து இருந்து திருப்பணிவிடையாளர்களின் ஆற்றல் மிகு அருளுரைகளைக் கேட்க, கவனிக்க, கிரகிக்க உதவுகின்றன. இத்தகைய வசதிகளைக்கொண்டதாக நமது தேவாலயம் இன்று விளங்குகின்றது.

அண்ணன் ஏசாவுக்குப் பயந்து மாமன் வீட்டுக்கு ஓடின வழியில், ஓர் இரவைக் கழிக்க வேண்டிய நிலை யாக்கோபுக்கு ஏற்படுகிறது. அவன் அவ்விடத்தில் படுத்து தூங்குகையில் ஒரு கனவு காண்கிறான். தன் பக்கத்தில் தேவ தூதர்கள் ஏணி மூலம் ஏறுவதையும், இறங்குவதையும் காண்கிறான். யாக்கோபு நித்திரை தெளிந்து, விழித்து எழும்பினபொழுது, "மெய்யாகவே கர்த்தர் இந்த ஸ்தலத்திலே இருக்கிறார். இது தேவனுடைய வீடு'' என்று காட்சி கண்ட அவன் சாட்சி கூறுகிறான். அந்த இடத்தில் தொழுது கொள்ளுகிறான். அதற்குப் 'பெத்தேல்' என்று பெயரிடுகிறான். இக்காட்சி கண்ட இடத்தைத் திருத்தலமாகப் பாவித்து, மகிழ்ச்சியுடன் கர்த்தருக்கு ஆராதனை செய்கிறான்.

கர்த்தர் மோசேயின் மூலம் பத்துக்கற்பனைகளைக் கொடுத்துத் தமது மக்களை வழி நடத்தி வந்தார். நியாதிபதிகளை, ராஜாக்களை ஏற்படுத்தி தம்மை மகிழ்ச்சியுடன் ஆராதிக்கும்படி செயல்பட்டு வந்தார்.

சாலமோன் மிகப்பிரம்மாண்டமான தேவாலயத்தைக் கட்டி, பாடகர்கள் குழு இசைக் கருவிகளை வாசித்து, ''கர்த்தர் நல்லவர். அவர் கிருபை என்றுமுள்ளது'' என்று ஸ்தோத்தரிக்கையில், தேவாலயம் மகிமையினால் நிரம்பி வழிந்தது. சாலமோன் ஜெபம் செய்து முடித்தவுடன் கர்த்தர் அந்த ஸ்தோத்ர பலிகளை சுகந்த வாசனையாக ஏற்றுக்கொண்டார்.

''என் நாமம் தரிக்கப்பட்ட என் ஜனங்கள் தங்களை தாழ்த்தி, ஜெபம் பண்ணி, என் முகத்தைத் தேடி, தங்கள் பொல்லாத வழிகளை விட்டுத் திரும்பினால், அப்பொழுது பரலோகத்தில் இருக்கிற நான் கேட்டு, அவர்கள் பாவத்தை மன்னித்து, அவர்கள் தேசத்துக்கு நன்மையை கொடுப்பேன். இந்த ஸ்தலத்திலே செய்யப்படும் ஜெபத்திற்கு என் கண்கள் திறந்தவைகளும், என் செவிகள் கவனிக்கிறவைகளுமாயிருக்கும். என் நாமம் இந்த ஆலயத்தில் என்றென்றைக்கும் இருக்கும்படி, நான் இதைத் தெரிந்துகொண்டு பரிசுத்தப்படுத்தினேன். என் கண்களும், என் இருதயமும் எந்நாளும் இங்கே இருக்கும்'' [2 நாளா. 7:14, 15]. என்பதாக கர்த்தராகிய ஆண்டவர் வாக்குக் கொடுத்திருக்கிறார். இந்த வாக்கு அத்துடன் முடிந்துவிடவில்லை. இன்றும் அந்த வார்த்தை ஜீவனுள்ளதாக, நமது ஆலயத்தில் செயல்பட்டு வருவதை எத்தனையோ சாட்சிகள் மூலம் தெளிவாக அறியலாமே!

இஸ்ரவேலர் அந்நிய தேவர்களை தங்கள் நடுவில் இருந்து விலக்கி, கர்த்தருக்கே ஆராதனை செய்து வந்தார்கள். தேவனுடைய ஆலயத்திற்கு தேசத்தின் முதற்பலனையும், சகலவித விருட்சங்களின் எல்லா முதற் கனிகளையும், மிருக ஜீவன்களின் தலையீற்றுகளையும், திராட்சை ரசம், எண்ணெய், வீடுகளில் பிசைந்த மாவின் முதற் பாகத்தையும், தசம பாகத்தையும் நமது முற்பிதாக்கள் மகிழ்ச்சியுடன் ஆலயத்திற்கு மனப்பூர்வமாக காணிக்கையாகப் படைத்தார்கள். தங்கள் முதற் ஆண் பிள்ளைகளையும் திருபணிவிடைபுரிவதற்காக ஆலயத்தில் கொண்டு வந்து கொடுத்தனர். ஆண் மக்கள் அனைவரும் தேவாலயத்தில், அவர் சந்நிதிக்கு முன்பாகக் காணப் படவேண்டும் என்பதாக ஒரு சட்டம், பழக்கம் இருந்ததாம். அவர்கள் கர்த்தருடைய சந்நிதி முன் வெறுங்கையுடன் வராமல், அவனவன் தன், தன் தகுதிக்கு ஏற்றபடி காணிக்கையுடன் வந்து, மகிழ்ச்சியோடு கர்த்தருக்கு ஆராதனை செய்தார்கள்.

சங்கீதக்காரன் தாவீதின் விழுமிய அனுபவங்களைப் பாருங்கள் :

''கர்த்தருடைய ஆலயத்திற்குப் போவோம் வாருங்கள் என்று அவர்கள் எனக்குச் சொன்னபோது மகிழ்ச்சியாய் இருந்தேன்'' சங். 122:1.

''நான் கர்த்தருடைய வீட்டிலே நீடித்த நாட்களாய் நிலைத்திருப்பேன்'' சங். 23:6.

''சேனைகளின் கர்த்தாவே! உமது வாசஸ்தலங்கள் எவ்வளவு இன்பமானவைகள். என் ஆத்துமா கர்த்தருடைய ஆலய பிரகாரங்கள் மேல் வாஞ்சையும், தவனமுமாயிருக்கிறது. உம்முடைய வீட்டில் வாசமாயிருப்பவர்கள் பாக்கியவான்கள். அவர்கள் எப்பொழுதும் உம்மைத் துதித்துக் கொண்டிருப்பார்கள். ஆயிரம் நாளைப் பார்க்கிலும், உமது பிரகாரங்களில் செல்லும் ஒரே நாள் நல்லது' ஆகாமியக் கூடாரங்களில் வாசமாயிருப்பதைக் காட்டிலும், என் தேவனுடைய ஆலயத்தின் வாசற்படியில் காத்து இருப்பதையே தெரிந்து கொள்ளுவேன்'' *[சங். 84:1, 2, 4, 10].*

அவர் வாசல்களில் துதியோடும், அவர் பிரகாரங்களில் புகழ்ச்சியோடும் பிரவேசித்து, அவரைத் துதித்து, அவருடைய நாமத்தை ஸ்தோத்தரியுங்கள்'' [சங், 100:4]

அசைவில்லாத, அழிவில்லாத ராஜ்யத்தை பெறுகிறவர்களாகிய நாம் பயத்தோடும், பக்தியோடும் தேவனுக்கு பிரியமாய் இந்த நூற்றாண்டு ஆராதனைகளில் கலந்து கொள்வோமாக! கர்த்தருடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்வோமாக!

**S. ஜாண் செல்லையா,**
செயலர்,
இந்திய வேதாகம சங்கம், மெய்ஞ்ஞானபுரம்.



# ஜான் தாமஸ் வாழ்கவே!

1. வாருங்க! வாருங்க! கூடுங்கடி — நம்ம
ஐயாவைப் போற்றிப் பாடுங்கடி — இந்
நந்நாளைப் பொன்னாளாய்க்
கொண்டாடுவோம் பாங்கியரே
தையத் தையத் தானா! தையத் தையத் தானா. (2)

2. காடாய்க் கிடந்த நெடுவிளையிலே
கால் மிதித்தார் இந்த தோமாஸ் ஐயா (2)
கப்பலேறினாரே (2) அவர் (2)
நம் கண் திறக்கவே
நம் இயேசு ராஜாவைச் சொல்லிடவே
இந்த நாட்டுக்கு வந்தார் தன் சீமை விட்டு. (2)

3. வேட்டைக்கு வந்தாரே - குதிரையேறி
வேட்டைக்கு வந்தாரே
கொக்கோடு நாரையும் கூழக் கிடாக்களும்
குதித்திடும் முயலும் கொண்டஞ் சிராடியும்
மானும் மரியும் மழலைக் கிளியும்
மாடப் புறாவும் காட்டெருமையும் — வேட்டைக்கு

4. தோட்டம் அமைத்தாரே — வெள்ளைத்துரை
தோட்ட்ம் அமைத்தாரே
வண்ண வண்ணமாய் பூக்கள் நிறைந்த
தோட்டம் அமைத்தாரே
ஜாதி மல்லிகை ரோஜா முல்லையும்
மஞ்சரளி பால்சன் வாடா மல்லிகை (2)
சீமை தக்காளியும் வாழையும் தென்னையும்
கனிமரங்கள் நிறைந்த நல்ல தோட்டம் அமைத்தாரே
தோட்டம் அமைத்தாரே—.

5. ஆலயம் கட்டினார் தாமஸ் ஐயர் ஆலயம் கட்டினார்
வானளாவக் கோபுரம் கொண்ட
ஆலயம் கட்டினார் (2) ஹை
ஐந்து வீடு கொண்ட ஊரு ஐநூறாக மாற
அல்லும் பகலும் அயராமலே உழைத்தார் இந்த வீரர்
வீதியான தெருக்களையும் அமைத்தார் இந்த பண்பர்
நல்ல சபையும் உருவாக்கி கல்விக்கூடம்
அமைத்த தொண்டர் (2)

பலப்பல விதக் கஷ்டம் வந்தும் திடனாய் நின்றாரே — மிக
கலகலப்புடன் கர்த்தருக்காய் பாடு சகித்தாரே
போர் புரிந்தாரே!
பக்தியிலே சபை வளர பாடுபட்டாரே — அவர்
போர் முனையில் இயேசுவுக்காய் பணிபுரிந்தாரே
டக்கு டக்கு டக்கு டக்கு சப்தம் கேட்குதே
வெள்ளைக் குதிரையேறி ஊரைச் சுற்றி பவனி வந்தாரே (2)

ஓங்கு கோபுரம் விளங்கும் உயர்பதியாம் மெய்ஞ்சையில்
பாங்குடன் பரந்திலங்கும் எங்கள் சபை வாழ்கவே
வாழ்க வாழ்க சிறியோர் பெரியோர்
பெற்றோர் குருமார் வாழ்கவே!
வாழ்க கனம் ஜாண் தாமஸ் புகழ் என்றும் வாழ்கவே!

—சிவந்திபாய் பொன்னுச்சாமி

# மெய்ஞ்ஞானபுரம் வரலாறு

அன்று—
அசுத்த ஆவிகளின் அரசாட்சி
அறியாமை மக்களின் மனசாட்சி
பாம்பு கடிக்குப் பேதைகளின் வைத்தியம் பேயாட்டம்
பார்த்து ரசிக்க கூடி நிற்பது பெருங்கூட்டம்
இறுதியில் மிஞ்சுவது உறவினர்களின் கண்ணீர்
இயக்கமின்றி துஞ்சுவது உபாதினைின் செந்நீர்
மெய்யொளி அறியாத **நெடுவிளை** மாந்தரெல்லாம்
**மெய்ஞானம்** அடையவில்லை நஞ்சுதனை வெல்வதற்கு

—0—0—

இம்மாந்தர்கள்—
நற்பாதையை விட்டு விட்டு
கற்பாதையில் கால்சறுக்கு
கலக்கமுற்று நிற்பதனைக்
கண்டுருகினார் கருணை தேவன்

—0—0—0

''ஓ என்னருமை சிருஷ்டிப்பே!
உனக்கேன் இந்நிலைமை?
நீ நடக்கும் பாதையிலே நான்
ஒளிக்கம்பம் ஊன்றாத குறையோ?
வழிமரம் வளர்க்காத பிழையோ?
வற்றாத நதி ஊற்றாத கறையோ?
நீ...
வழி தவறிய ஆடானாய்
வார்த்தையில்லா ஏடானாய்
ஒளியும் நானே!
வழியும் நானே;
வற்றாத நதியும் நானே!
என்னை உனக்குத் தருகிறேன்
எடுத்துச் செல்ல **ரேனியஸ்**
ஏற்றுக் கொள்ள மனமிருந்தால்
ஏற்றம் பெறுவாய் என் மூலமாய்
எனப் பகர்ந்தார் இரக்க தேவன்.

—0—0—0

தேவ எண்ணம் ஈடேற
தேம்பல் நிலை நெடுவிளையை
தேடி வந்தார் ரேனியஸ்
தேர் போன்ற குதிரையிலே
அங்கே ஓர் வீட்டு முன்
அவர் கண்ட காட்சி

—0—0—0

பரிதாபம் ஒன்று படுத்துக் கிடந்தது; அதை
அபசாரம் தின்று எழுந்து நின்றது
பாவம்:
பாம்பு தன் புத்தியைக் காட்ட
வாடிக் கிடந்தான் பேயாடி மகன்.
பரிகாரி ரேனியஸ் கத்தியால் கீற
கடிவாய் விஷம் ஓடி மறைந்தது.
விழித்தெழுந்தது அவன் உடல் மட்டுமன்று
விழுந்து கிடந்த உள்ளங்களும் எழுந்து நின்றன அன்று
கிறிஸ்தவம் அங்கே விதைக்கப்பட்டது
கிளைவிட்டு அது வளர்ந்து வந்தது...
நஞ்சை மருந்தென எண்ணிய மக்கள்
நல்மனதை அழிக்கப் பின்னும் துணியவில்லை...
பழைய ஆடை போர்த்திய **நெடுவிளை வூரானது**
புத்தாடை அணிந்து **மெய்ஞ்ஞானபுரமானது...**
**ரேனியஸால்! ரேனியஸால்!! ரேனியஸால்!!!**

**A. தியோடர் அற்புதராஜ்**



## "பரிசுத்த ஜாண்தாமஸ் மாணவர் இல்லம்"

ஜெர்மன்தேசத்து உதவியுடன் மெய்ஞ்ஞானபுரத்தில் பரிசுத்தவான் ஜாண்தாமஸ் ஐயரவர்களின் பெயரில் Y.M.C.A. சங்கத்தின் சார்பாக Y.M.C.A கட்டடத்தில் 1971ஆம் ஆண்டு ஒரு மாணவர் இல்லம் ஆரம்பிக்கப்பட்டது. Y.M.C.A சங்கத்தின் தீவிர முயற்சியால் இந்த இல்லம் நிறுவப்பட்டது. ஆரம்ப காலத்தில் 10 பேரைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட இந்த இல்லம் தற்போது 40 மாணவர்களைக் கொண்டு நடத்தப்பட்டு வருகிறது. இல்லம் ஆரம்பிக்கும்போது Y.M.C.A சங்கத்தின் தலைவராக இருந்த மறைந்த திரு G ஜாண்தாமஸ் என்பவரின் பொறுப்பில் இல்லம் நிர்வகிக்கப்பட்டு வந்தது. தற்போது மேற்படி இல்லம், பரிசுத்த ஜாண்தாமஸ் இல்லத்திற்காக வாங்கப்பட்ட ஒரு கட்டிடத்தில் நடத்தப்பட்டு வருகிறது. மெய்ஞ்ஞானபுரத்தை நிர்மானித்த அந்த புனிதவான் பெயரில் ஒரு மாணவர் இல்லம் நடத்தப்படுவது சிறப்பான ஒரு செயலாகும்.

**S. டேவிட்ராஜ்,**
தலைவர் Y.M.C.A;
மெய்ஞ்ஞானபுரம்.

# மெய்ஞ்ஞானபுரத்தை சுற்றிப் பாருங்கள்

அடுத்த பக்கத்தில் பட விளக்கம்.




ன்றுமய....

தியோடர், B. A.

1 — பரி. பவுலின் ஆலயம்
2 — ஆண்கள் தொடக்கப்பள்ளி
3 — பெண்கள் மேல்நிலைப்பள்ளி
4 — தொடக்கப்பள்ளிக்கான காலி இடம்
5 — அம்புரோசு மேல்நிலைப் பள்ளி (ஆண்கள்)
6 — ஆங்கிலப் போதனா பள்ளி
7 — புனித தோமா ஆண்கள் மாணவர் இல்லம்
8 — தட்டெழுத்துப் பயிற்சிக் கூடம்
9 — B.Ed. கல்லூரிக்காக ஒதுக்கப்பட்ட இடம்
10, 11 } சத்துணவுக் கூடங்கள்
12 — Y.M.C.A.
13 — பஞ்சாயத்து ஆபீஸ்
14 — அரசு மருத்துவமனை
15 — விஜிமா தனியார் மருத்துவமனை
16 — கல்லறைத் தோட்டம்
17 — தபால் நிலையம்
18 — கூட்டுறவு வங்கி
19 — கூட்டுறவு பண்டகசாலை
20 — தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி
2 — பாண்டியன் கிராம வங்கி
22 — வியாபாரிகள் சங்கம்
23 — ரைஸ்மில்
24 — விவசாயிகள் சங்கம்
25 — தமிழ்நாடு மின்வாரியம்
26 — மின்மாற்றி
27 — ராட்டை நூற்பு நிலையம்
28 — வாட்டர் டாங்க்
29 — ரேசன் கடை
30 — மீன் கடை
31 — பனைஓலைத் தொழில் கூடம்
32 — சார் பதிவாளர் ஆபீஸ்
33 — காவல் நிலையம்

Scale

கிழக்கு மேற்கு வரை 3400 அடி. வடக்கு தெற்கு வரை **2100** அடி.





# சரித்திர உதயம்



நூலெழுதிச் சிறப்பிப்போம் நூதன மனதாலே
நூறாண்டுத் திருநாளை வாழ்த்தியே நாமும்
வாய் மலர் வாழ்த்துச் சொல்லெல்லாம்
வாழ்க நிலை எழுத்தாய் நாளெல்லாம்.

அலை அலையாய் மக்கள் வெள்ளம்
அருள் அகத்து ஆனந்தப் பொலிவோடு
ஆலய ஆண்டு நூறுப் பெருநாளை
ஆசரிக்க மெய்ஞ்ஞானநகர் கூடுதல் காணீர் !

பகல்கதிர் காத்திட முகில் சேனை
பந்தலாய் பின்னிடும் மகுட வானை
நட்சத்திர சேனை இரவினில் வானை
நந்தவன அலங்காரம் செய்திட பாரீர் !

எழில் பொழியும் ஏழடுக்கு கோபுரம்
எண்திசை செப்பிடும் ஒளியொடு கீர்த்தியை
இனிய ரீங்காரம் அழைக்கும் மணியோசை
ஈர்க்கும் குணம் கொண்டது கேளீர் !

நடைத்தெரு சோடனைகள் விழிகளைக் கவர்ந்திட
நடுத்தெரு தென்னைகள் பச்சைக்கொடி காட்டிட
நாவினால் துதிபாட பாடகர்குழு தயாராக
நாட்டமிக்கோர் நடந்துவரும் அழகு பாரீர் !

வியப்புடன் ஆலயம் விருந்தினர் கண்டு
விளையும் மகிழ்வினை நெஞ்சினில் கொண்டு
வினவுவர் இறைவீடு ஆக்கியோன் யாரென்று
வித்தகர் ஜாண்தாமஸ் விதைத்தது என்போம்.

சங்கையர் தந்தது சரித்திர உதயம்
சமர்ப்பணம் தூயவர் தாமஸின் ஆதரம்
சந்தித்த எங்கள் மேன்மை இதயம்
சன்மான காணிக்கை இயேசுவின் வசியம்.

எங்கள் நன்றி இயேசுவுக்கே அன்றி
எவர்க்கும் அன்று எனக்கூறல் நன்று
முழங்கால் ஊன்றி ஒருமித்து வேண்டி
முழுபயன் பெறுவர் இயேசுவை அண்டி.

கொண்டாட்டு சனவரி தினங்களாம் பத்து
கொழுமை ஆத்தும ஆகாரமாம் சத்து
இயல் இசை நாடகம் பெற்று
இன்னம் பெறுவோம் அருளுரை ஊற்று.

சாதி சமய வேறுபாடு அகற்றி
சாந்தன் இயேசுவை அனைவரும் போற்றி
ஆசன வைபவம் சிறப்புற ஆற்றி
அடைந்தோம் ஒற்றுமை அன்பரின் வெற்றி.

சரித்திர புகழொடு மெய்ஞானபுரம் விளங்க
சந்தர்ப்பம் கிட்டியே நூற்றாண்டுவிழா கண்டோம்
சாவினை வென்றவர் சாயலாம் வாழ்வினில்
சாட்சியாய் வாழ்வோம் அவருக்கே என்றும்....

நன்றி !

—A. தியோடர், B. A.

# நீ ஆதியில் கொண்டிருந்த அன்பை விட்டாய்!



ஆசியாவிலுள்ள ஏழு சபைகளில் ஒன்றாகிய எபேசு சபையைப் பார்த்து சொல்லப்பட்ட வார்த்தைகள் இவை.

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களால் ஸ்தாபிக்கப்பட்டும், பராமரிக்கப்பட்டும் வந்த வருகிற நம் மெய்ஞ்ஞானபுரம் சபைக்கும் இவ்வார்த்தைகள் பொருத்தமானவைகளாகவே இருக்கின்றன. மெய்ஞ்ஞானபுரம் சபையே, ''நீ ஆதியில் கொண்ட அன்பை விட்டாய்''

## எதிலே அன்பை விட்டிருக்கிறோம்?

**சபை கூடி ஆண்டவனை ஆராதிப்பதில்.**

முன் காலத்தில் ஒரே சபை, ஒரே வணக்கம், ஒரே விசுவாசம், ஒரே வழிபாடு. இன்று உன் நிலை என்ன? எத்தனை பாகுபாடு. எத்தனை பிரிவுகள், எத்தனை மார்க்கபேதங்கள் அக்காலத்து மக்கள் தங்கள் சபையைப் பற்றியும், மார்க்க கொள்கைகளைப்பற்றியும் வைராக்கியமாய் காணப்பட்டனர். இயேசுக் கிறிஸ்துவின் உபதேசத்துக்கு விரோதமானவர்களைக் காணவும் முடியாது. அப்படிப்பட்டவர்கள் ஊருக்குள்ளே அனுமதிக்கவும்பட மாட்டார்கள். எனவே ஆடுகள் சிதறப்பட்டு விட்டன. மக்களின் அன்பு பல இடங்களிலும் சிதறிப் போயின. எனவே சபை கூடி ஆராதிப்பதில் மிகவும் குறைவு. ஏனெனில் லௌகிக ஞானத்தினாலும், மாயமான தந்திரத்தினாலும் விசுவாசத்தில் குறைவுள்ள மக்கள் கொள்ளை கொண்டு போக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே ஒன்றுபட்டு, வைராக்கியத்தோடு இறைவனை வழிபடுவதில் ஆர்வம் கொள்வோம்.

**சபை கூடி ஆராதிப்பதில் காட்டபட்ட பக்தி வைராக்கியத்தில் குறைந்து விட்டது.**

அன்று வழிபாட்டில் பெரியவர்களும், சபை மூப்பர்களும், ஊழியர்களும் ஒற்றுமையோடு காணப்பட்டனர். பக்தி பரவசத்தோடு கடவுளை ஆராதித்தோம். இன்று இந்த வழிபாட்டில் நம் அன்பு எவ்வளவோ குறைந்து விட்டது. முன் காலத்தில் என்றைக்காவது ஆலயத்தில் பிரசங்கிக்கிறவர் ''பேசாதேயுங்கள், சத்தம் போடாதிருங்கள், அமைதியாயிரு'' என்று சொல்லப்பட்டதோ? சிந்தித்து செயல்படுங்கள்.

**ஊழியர் உண்மையாய் பணிபுரிவதில்.**

முன் காலத்தில் சபை ஊழியர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட ஊழியம் தேவஊழியம் தேவ ஊழியத்தில் ஆசை அன்பு வைராக்கியங் கொண்டு ஊழியத்தை நடத்தினர். எனவே அவன் சந்ததி அப்பத்துக்கு இரந்து திரியாமலும், அவரால் மேலான ஆசீர்வாதங்களையும் பெற்றனர். அக்காலத்தில் கொடுக்கப்பட்ட ஊழியம் மிகவும் குறைவு. அதைக் கொண்டு தங்கள் பிள்ளைகளை மேலான வேலைகளுக்கும் படிக்க வைக்கும் வசதியை உடையவர்களாகக் காணப்பட்டனர். இன்று நீ அன்பை விட்டதினால் சரீரப் பிரகாரமான ஆசீர்வாதமுமில்லை.

**ஓய்வுநாள் ஜெபக்கூட்டத்தில் பங்கு பெருவதில்.**

இதிலே நம் அன்பு எவ்வளவோ குறைந்து விட்டது. ஆலய முன் ஜெபக்கூட்டம் என்றால் 3 பக்கமும் ஜனங்கள் திரண்டு காணப்படுவார்கள். இன்று உன் நிலை என்ன. கைவிட்டு எண்ணி விடலாம். நிற்க, ஜெபக்கூட்டம் ஆரம்பமாகும்போது பார்த்தால் என்ன பரிதாபமான நிலை! பாதி கூட்டம் ஆனபிற்பாடு ஓர் சிறிய கூட்டம். ஜெபக்கூட்டத்துக்கு லைற் தூக்கக்கூட காசு கொடுக்க வேண்டிய நிர்பந்தம்! அன்பு, ஆர்வம் எல்லாம் போய் விட்டது! முன் காலத்தில் பக்கத்து கிராம மக்கள் மெய்ஞ்ஞானபுரத்தில் காணப்படும் ஜெபக்கூட்டத்தை ஆர்வத்தோடு

பார்க்க வருவார்கள். இன்று நாம் மற்றவர்களை வரவழைக்கும் நிலையில் உள்ளவர்களாக இல்லையே. எனவே அன்பு குறைந்து விட்டதே.

**ஆத்ம ஆதாயத்தில் :**

ஊழியத்திலே மற்றவர்களை ஆதாயம் பண்ணுவதிலே இந்நாட்களில் பல தினுசாக ஊழியம் அதிகமாக நிறைவேற்றப்படுகிறது. ஆனால் ஆத்ம ஆதாயமில்லை. ஏன்? மற்றவர்களுக்கு போதிக்கிற நாமே முன் மாதிரியாக இல்லை. மற்ற புறமதஸ்தர்களிடம் காணப்படாத குறைபாடுகள் நம் கிறிஸ்தவர்களிடம் அதிகம். எனவே பலன் இல்லை. மற்றவர்களுக்கு முன் மாதிரியாக இருந்து செயல்படுவோம்.

**ஓய்வுநாள் ஆசரிப்பில் :**

எழுத்தின்படியும், பிரமாணத்தின்படியும் ஓய்வுநாள் ஆசரிப்பில் காணப்பட்டது கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட மெய்ஞ்ஞானபுரம் சபைதான். எழுத்தின்படி கைக்கொண்டு வந்த சபை இன்று ஓய்வு நாளை இதர நாளைப்போலவே தன் சொந்த வேலையிலும், விதைப்பு, அறுப்பு, வீடு கட்டுதல் முதலியவைகளில் ஈடுபடுகின்றன. முன் காலத்தில் மக்களின் கையின் பிரயாசங்கள் அதிகமாய் ஆசீர்வதிக்கப்பட்டன. எந்த இடத்திலும் மெய்ஞ்ஞானபுரத்தின் மகன் உயரிய பதவியில் காணப்பட்டான் கொஞ்ச பாடுபட்டு அதிக பலனை அனுபவித்தான் இன்று நேர்மாறாகக் காணப்படுகிறது. ஏன்? ஓய்வு நாள் ஆசரிப்பின் குறைவே.

**சாக்கிரமெந்தில் பங்கு பெறுவதில் :**

ஆவிக்குரிய ஜீவியத்தின் வளர்ச்சியைக் காண்பிப்பதில் அவரோடு ஐக்கியப்படும் பந்தியில் சேர்வதில். ''என் மாம்சத்தைப் புசியாமலும், என் இரத்தத்தில் பங்கு பெறாமலும் இருக்கிறவனுக்குள் ஜீவன் இல்லை ' என்று இயேசு சுவாமி கூறுகிறார்.

எனவே ஆதியில் கொண்ட அன்பை விட்டு விடாதபடி, புதிய ஆண்டிலே எல்லா காரியங்களிலும் அன்பை வளரப்பண்ணி, எல்லா நன்மைகளையும், ஆசீர்வாதங்களையும் நிறைவாய்பெற்று வாழ வல்ல இறைவன்தாமே சகலவித பரிபூரண ஆசீர்வாதத்தினால் நிரப்பியருளுவாராக.

Rev. P. Samuel Jeyaraj,
*Megnanapuram.*



# ஆலயம், ஆகமம், ஆத்துமா

பரிசுத்த பவுலின் ஆலய அமைப்புகளை நம் சிந்தனைக்கு கொண்டுவர ஆசிக்கின்றேன். ''கன்மலையின் மேல் தன் வீட்டைக் கட்டினவன் புத்தியுள்ள மனுஷன்'' (மத் 7:24) என்று இயேசு பெருமான் விளம்பியுள்ளார் அவர் நாம மகிமைக்கென்று கற்பாறையின் மீது அஸ்திபாரத்தை அமைத்து அழகிய ஒரு வீட்புனைக் கட்டியுள்ளார், மதிப்பிற்குறிய பக்தன் கனம் ஜான்தாமஸ் ஐயரவர்கள் அதுதான் நாம் இன்று மெய்ஞ்ஞானபுரத்தில் காணும் தேவாலயம்.

புனித சிலுவையின் அமைப்பில் இந்த புனிதமான ஆலயம் கட்டப்பட்டுள்ளது போற்றுதற் குரியது. நாற்பது நாட்கள் உபவாசமிருந்து மானுடரின் பாவபாரங்களை தாங்கிய இயேசு கிறிஸ்துவின் சாட்சியாக நாற்பது தூண்கள் ஆலயத்தைத் தாங்கி நிற்பதாக கட்டப்பட்டு உள்ளது. தூண், ஜன்னல் முகடுகளில் புறா உருவம் வரையப்பட்டிருப்பது ஆவியானவர் புறா உருவில் கிறிஸ்து மீது இறங்கிய சம்பவத்தை நினைவூட்டுகிறது. இப்படி புறா உருவம் நூறு இடங்களில் சிற்பமாக வரையப்பட்டுள்ளது

பன்னிரண்டு சீடர்கள் நினைவாக பன்னிரண்டு உட்பிரகார தூண்கள் அமைக்கப் பட்டுள்ளது. தேவன் உலகத்தை சிருஷ்டித்த ஆறுநாட்களையும் ஓய்ந்திருந்த நாளையும் குறிக்கும் வண்ணமாக ஏழு நுழைவு வாசல்கள் அமைக்கப்பட்டுள்ளது.

திரியேக தேவன் மாரி காலத்தில் சாட்சியாக வரைந்த வானவில் தெய்வகுமாரன் இயேசு கிறிஸ்து சிலுவையில் விடுத்த குரல்கள் ஆகியவைகள் தரும் இனிய வார்த்தைகள் ஏழு. அந்த ஏழு வார்த்தையின் பின்னனியில் ஏழு மாடிகளை அழகாக கட்டி கோபுரமாக்கி நமக்குத்தரப்பட்டுள்ளது

கோபுரமுடிப்பு ஏழு கற்களால் அமைந்துள்ளது. அவைகளை சிலுவையில் இயேசு சொன்ன ஏழு வசனங்களோடு ஒப்பிடுங்கால், முதல்மூன்று, பிரிவுள்ளகற்களும், இயேசு பிறருக் காக கூறிய மூன்று வசனங்களை நினைவூட்டுகிறது அடுத்து உள்ள மூன்று முழுமையான கற்கள் இயேசு பிதாவிடம் வேண்டிக்கொண்ட மூன்று வசனங்களை காட்டுகிறது. ஏழாம்கல் இரண்டு பிரிவுள்ளதாக உள்ளது. அது இயேசுவின் ஜீவன் இவ்வையகத்தைவிட்டு பிரிந்து பிதாவிடம் ஒப்படைக்கப்பட்டதை நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

கோபுர உச்சிமுனயில் அமைந்திருக்கும் மகுடக்கல் மூன்று கற்களினால் அமைந்துள்ளது. அது ''பிதா, குமாரன், பரிசுத்தஆவி'' என்னும் திருத்துவத்தை மூன்று கற்களால் ஆன மகுடக்கல் தெளிவு படுத்துகிறது.

[கொல்கதா மேட்டினில் கொலை மர சிலுவையில் ஐம்பெருங்காயங்களை ஏற்றுநம் ...களை மீட்டு நம்மை காத்திட்ட இயேசுபெருமான் போல், மகுடக்கல் உச்சியில் ஐந்து பிரிவு ...ளால் ஆன காந்தமானது நம் ஆலயத்தை இடியின் பெருந்தாக்குதலினின்று காத்து ...றது.]

இத்தனை பெருங்காரியங்களை நமக்கு தருகின்ற இவ்வால்யம் பழுது ...ட்ட சமயத்தில் நம் சபை மக்கள் ஜெபம், உழைப்பு, நீதி போன்றவற்றை தாராள மனப்பான்மையோடு வழங்கி ஆலயத்தின் பழுது நீக்கியபின் ஆலயத்தின் வனப்பை புதுப்பொலிவுடன் காண்கிறோம்.

''நீங்களே அந்த ஆலயம்'' (1 கொரி 3:17) என்று வேதம் கூறுகிறது. ஆம் நாமும் கிறிஸ்துவுக்கு ஆலயம்தான். நம்மில் கிறிஸ்து வாசம் பண்ண இடம் அளிக்காமல், பழுது அடைந்த நிலையில் நம் இதயத்தை வைத்திருப்பின் ஜெபத் தினாலும் தூய சிந்தனையினாலும் உபவாசத்தாலும் நம் இதயத்தைச் சுத்திகரித்துப் பழுதுநீக்கி மறுபிரதிஷ்டை செய்து கிறிஸ்துவை நம் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டு அப்பரம பிதாவின் பரிசுத்த ஆலயமாகுவோம்!

ஆமென்.

சா. செல்வராஜ்,
மெய்ஞ்ஞானபுரம்.

## பரி. பவுலின் ஆலயத்தில் திருப்பணி விடை செய்த திருப்பணி விடையாளர்

### குருமார் :

1. Rev. John Thomas
2. ,, James Sprat
3. ,, John Visardu
4. ,, A.B. Valbi
5. ,, Daniel Paul
6. ,, Srinivasan Muthusamy
7. ,, William Grey
8. ,, D.P. Arumainayagam
9. ,, D. Veeravagu
10. ,, Ashton Dibb
11. ,, Davis Thomas
12. ,, Gnanamuthu
13. ,, Joseph David
14. ,, H.S. Masilamani
15. ,, Dr. M.H. Cooksly
16. ,, J. Islay
17. ,, E.A. Doughlas
18. ,, L.A.S. Prince
19. ,, P.J. Harris
20. ,, J.D. Gnanavutham
21. ,, D.P Durairaj
22. ,, John Arulananitham
23. ,, Y.D. Devadason
24. Rev. Devaveeran
25. ,, S.G. Mathuram
26. ,, D.S. Joseph
27. ,, Abraham Masilamani
28. ,, Cannon. S. Paul Manickam
29. ,, B. Arulananitham
30. ,, G.T. Simeon
31. ,, Cannon. S Paul Manickam
32. ,, D.S. David
33. ,, Cannon J. Gnanayutham
34. ,, John Jesudason
35. ,, D.D. Rajamani
36. ,, M A. Melchizedec
37. ,, A.J. Samuel
38. ,, M.D, Rajamany
39. ,, P.S. Asirvatham David
40. ,, P. Jebamani
41. ,, A. Diraviam Jesudason B.D,
42. ,, S.D. Daniel
43. ,, M.S. Jesudasan
44. ,, J. Ratnam
45. ,, Dr. B. Darmarajan, D D,

### உதவி குருமார் :

1. Rev. Arumai V. Devadason
2. ,, Thangaiah Sither
3. ,, Isaac
4. ,, Devavaram
5. ,, Jesudian
6. ,, Daniel James
7. ,, Andrew Kurrian
8. ,, T.S.R. Victor
9. ,, Daniel
10. ,, G. Isreal
11. ,, R. Nester Philip
12. ,, E P. Gnanasigamani B.A.L T
13. ,, S. Daniel Abraham B.D.S.T M,
14. Rev. V. Peter Durairaj
15. ,, D: Solomon
16. ,, J. Ratnam
17. ,, J. Basker Daniel
18. Deacon. Rajapandian
19. Rev. Jason Selvakumar M.A,B.EdB.D.,
20. Deacon. M. Frederic Ratnaraj B.Sc.,
21. ,, Gnanamuthu Monickam
22. ,, Anand Asir B.Sc, B D,
23. ,, Vethanayagam B A.B D.,
24. ,, Jones S. Ragland B.A.B D,
25. ,, T. Austin
26. ,, G. Jeyakumar B.A.BD.